ளுத்தமானென்று புகுந்தினிது விளையாட) ஸுவர்ணரத்நாதிக ளாலே நாநாவர்ணமா யிருப்பதொரு மானின் வேஷத்தைக் கொண்டு மாரீசனானவன் ஜாதிம்ருகங்கள் நடுவே புகுந்து அவை விஸஜாதீயமென்று வெறுத்துப்போகச்செய்தேயும் இதொன்றும் தனியே!நின்று இஷ்டத்திலே விளையாடுகிறதாக பாவித்துநிற்க.

(நின்னன்பின் வழிநின்று) தேவரீர் பக்கலுண்டான ஸ்நே ஹத்தினுடைய வழியாக மற்றொன்று திருவுள்ளம் பற்றுமையாலே நிலைநின்று. (சிலைபிடித்தெம்பிரானேக) தமக்குச்சிலையும் கணையும்

ளுத்தமானித்யாதி) மாயாவியான மாரீசன் இதுக்குமுன்பு லோ கத்தில் கண்டறியாததொரு வடிவையெடுத்துக் கொண்டுவந்தா னுகையாலே, பொன்போலிருக்கிற நிறத்தையும் நாநாரத்நங்கள் போலிருக்கிற புள்ளிகளையும் மற்றுமநேகம்வைசித்ரியையு முடைத் தாயிருப்ப தொருமானனது, எழுந்தருளியிருக்கிற ஆஶ்ரமத்தின் முன்னேவந்துமநோஹரமாம்படிநின்று துள்ளித்துள்ளிவிளையாட.

(நின்னன்பின்வழிநின்று) "இத்தைப்பிடித்துத்தரவேணும்" என்று பெருமாளைப்பார்த்து தேவரீர் அருளிச்செய்தவிடத்தில் இளையபெருமாள் அருகேநின்று, "லோகத்தில் இப்படி யிருப்ப தொரும்ருகமில்லை, மாரீசன் இங்ஙனே சிலமாயாரூபங்களைக்கொ ண்டு திரியும்" என்று ப்ரஸித்தம்; ஆகையால், இது மாயாம்ருகம்" என்னுநிற்கச் செய்தேயும், தேவரீருடைய ஆசையின்வழியிலே

துக்கு - அத்விதீயத்வமென்று விவக்ஷித்து. அதுக்கு, ஹேதுபூர்வகம் தாத்பர் யமருளுகிறுர் (மாயாவியானவித்யாதி). (புள்ளிகளையும்) பிந்துக்களையும். (மற் றும் அநேகவைசித்ரியையும்) என்றது - மணிப்ரவரஶ்ருங்காக்ரத்வாதிகளை.

நின்சொல்வழியென்னுதே, "அன்பின்" என்றதுக்கு அநதிலங்க்கநீயத் வம்தோன்றுகையால்அத்தையருளுகிறுர்(இத்தையித்யாதி). (திரியுமென்று ப்ரஸித்தம்)என்றது-(௧)"[Grantha text]। [Grantha text] சரந்தோம்ருகயாம்ஹ்ருஷ்டா: பாபேநோபாதிநாவநே। அநேநநிஹதாராஜந்ரா ஜாந: காமரூபிண:" என்று இவர் முன்பு கதையைக் கேட்டுச் சொல்லுகை யைப்பற்ற. பிராட்டிபெருமாளைப்பார்த்துச்சொன்னுல்,(௨)"[Grantha text] - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்றிருக்கிற விளையபெருமாளிருக்

(௧) ஆர-ஆ. (௨) ரா-அ-௩௧-௨௫.

துணையாக, உமக்கு இளையபெருமாள் துணையாக வெழுந்தருள, க்ருத்ரிமரூபமான ராக்ஷஸோக்திவிசேஷத்தாலே தேவரீர் திருவுள்ளம் கலங்கி"அங்கே சீக்ரமாகச்சென் றறியீர்" என்று நியமிக்கவும் அவர்மறுக்கமறுக்க அவரால் மறுக்க வொண்ணாதபடி அருளிச்செய்தபின்பாக அத்தனியிடத்திலேபிரிந்ததென்னுதல்; பெருமாள் முன்னே பிரிகையாலே பின்னே பிரிந்த தென்னுதல்.

---

நின்று. (சிலைபிடித்தெம்பிரானேக) இளையபெருமாளை இங்குத்தைக்குக்காவலாக நிறுத்தி, திருக்கையிலே, பிடித்தவில்லும் தாமுமாய்க்கொண்டு அத்தைப்பிடிப்பதாகப் பெருமாள் நெடுந்தூரமெழுந்தருள. பின்பு தங்களை யெல்லாரையும் விஷயீகரித்த உபகாரத்தை நினைத்து "எம்பிரான்" என்கிறான்.

(பின்னேயித்யாதி) நெடுந்தூரம் பின்பற்றிப்போன விடத்திலும் பிடிகொடாமல் அது தப்பித்திரிகையாலே "இதுமாயாம்ருகம்" என்று திருவுள்ளம்பற்றி அதின்மேலே ஶரத்தைவிட, அது பட்டு விழுகிறபோது "ஹா ஸீதே!,ஹா லக்ஷ்மணா!" என்று பெருமாள் மிடற்றோசைபோலே கூப்பிட்டுக் கொண்டுவிழ, அத்தை தேவரீர் கேட்டருளி, பெருமாளுக்கேதேனும் அபாயம்வந்ததாக நினைத்து, "இத்தைச் சடக்கெனப்போய் அறியும்" என்று தேவரீர் அருளிச்செய்யச் செய்தேயும் இங்குத்தைக்குக் காவலாகநிறுத்திப் போகையாலும், பெருமாளுடைய ஶௌர்யத்தை யறிகையாலும் "அங்குத்தைக்கு ஒன்றும்வாராது, தேவரீர் பயப்பட்டருளவேண்டா" என்று விண்ணப்பம்செய்து, தாம்போகமாட்டாமல் சுற்றிக்கொண்டுநிற்க, அவர் நில்லாமல் போகவேண்டும்படி தேவரீர் சிலவருளிச்செய்கையாலே, பிற்பாடு அங்கே இளையபெருமாள் பிரிந்துபோனது மோரடையாளம். .... .... .... (எ)

---

கத்தாமேயெழுந்தருளுவானென்னென்னவருளுகிறார் (இளையபெருமாளையித்யாதி). இத்தால் பிராட்டிவார்த்தையில் அபிநிவேஶத்தாலே தாம்காவலாக விராமலெழுந்தருளினாரென்று கருத்து. ம்ருகத்தின் பின்தொடருகைதிருவடிக்கொரு உபகாரகமல்லாமலிருக்க, எம்பிரானென்னக்கூடுமோ வென்ன வருளுகிறார் (பின்பித்யாதி).

பெருமாள் காவலாகவைத்திருக்க, இவர் பிரிகைக்கு ஹேதுவென்னென்ன, அத்தைப்பரக்கவுபபாதிக்கிறார் (நெடுந்தூரமித்யாதி) ... (எ)

மூ.—மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவீ விண்ணப்பம்
ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான்
இத்தகையாலடையாள மீதவன்கைமோதிரமே. (அ)

பெருமாள் பிரிந்தபோது இளைய பெருமாளுண்டு. இவர் பிரிந்ததிறே அரிதாய்த்தோற்றுகிறது. (க) "நவஸீதாஸூயா ஹீநா - நசஸீதாத்வயாஹீநா" என்னவும் பொருந்தாமையோடேகொண்டுபோருவது, ஸ்ரீகுஹப்பெருமாளோடேகூடினபோது பாகவதலாபத்தாலே உருக்காண்பது, அதினுடைய அலாபமே ஸித்திக்கில் "கிம்கார்யம்" என்பது முதலாகக்காரியப்பாடொழிய வறியாதவர்க்கும் இவருடைய வசநபரிபாலநம் செய்கிறவர்க்கும் இக்கலக்கம் பைத்ருகமாமித்தனையிறே. .... .... (எ)

அவ;—எட்டாம்பாட்டு. (மையித்யாதி) நீ இவையெல்லா மறிந்தபடி யென்?" என்றருளிச்செய்ய, அதுக்கு ஹேது இன்னதென்கிறது இப்பாட்டால்.

ஸ்வா;—(மையித்யாதி). திருக்குழலிருட்சிக்கு மையொரு புடைக்கொப்பாக்கி, அதின்மேலே மலரையும்கூட்டுகையால், இப்போதுகண்டதன்றே, கீழ்"நெறிந்தகருங்குழல்"என்கிறப்போலேயிறே இப்போது பொலிவழிந்து ஆர்ப்பேறிக்கிடக்கச் செய்தேயும் இதுக்குப்ராப்தமாகத்தகுவனதேடிச்சொல்லவுமாமிறே, நல்சரக்குக்குவந்தவழுக்காகையாலே.இக்குழல் மைத்தகுமாமலர்க்குழலாக வன்றோ புகுகிறது" என்று மங்களவாசகமாகவுமாம். (வேதேவீ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (மைத்தகுமாமலர்க்குழலாய்). மைபோலே இருண்டு ஶ்லாக்யமானமலரோடே கூடியிருக்கும் குழலையுடையவளே! இந்த விசேஷணங்கள் இப்போதிருக்கிற இருப்புக்குச் சேராமையாலே, இப்படியிருக்கைக்கு யோக்யமான குழலென்றுசொல்லுகிறுனுமித்தனை.பிரிவாற்றாமையாலேபேணாமலிருக்கையால் புழுதிபடைத்துப் பூமாறியிறே யிப்போது கிடக்கிறது. (வை

அரு;-எட்டாம்பாட்டு. (மைத்தகுவித்யாதி) இவ்விஶேஷணங்கள் இப்போதை யிருப்புக்குச்சேராமையை உபபாதிக்கிறார்(பிரிவாற்றாமையாலேயித்யாதி)

(க) ரா-அ-௫௩.௩௧.

இதுவும் பைத்ருகம். (விண்ணப்பம்) முறைமை தோன்றச் சொல்லுகிறான். (ஒத்தவித்யாதி) ஸக்யராய் சோகஹர்ஷங்களொத்திருக்கையாலே "ஒத்தபுகழ்" என்கிறது. (வானரக்கோன்) வாநரராதேவீ) தேஹத்தை உபேக்ஷித்திருக்கிறபடியைக்கொண்டு சொல்லுகிறான். (விண்ணப்பம்) இந்த விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றவேணுமென்கை.

(ஒத்தபுகழ்வானரக்கோன்) காண்பதற்குமுன்னே (௧) "ஸுக்ரீவம் நாதமிச்சதி - ஸுக்ரீவம்நாதமிச்சதி" (௨) "ஸுக்ரீவம் சரணம்கத: - ஸுக்ரீவம் சரணம்கத:" என்று இளையபெருமாள் அருளிச்செய்யும்படி தாமே பஹுமாநம் பண்ணிக்கொண்டுவந்து, கண்டபின்பு அக்நி ஸாக்ஷிகமாக ஸக்யம்பண்ணி, (௩) "த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம் து:க்கம்ஸுகஞ்சநௌ - த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம் து:க்கம்ஸுகஞ்சநௌ" என்று பெருமாள் அருளிச்செய்த பின்பு, "பெருமாளோடு சோகஹர்ஷங்கள் ஒத்துப்போந்தவர்" என்னும் புகழையுடையராய் வாநராதிபதியான மஹாராஜர். இப்போது வாநராதிபதியென்றது ஸாபிப்ராயம். அதாவது-தேவரீரைத்தேடுகைக்காக (௪) "யாம்கபீநாம் ஸஹஸ்ராணி-யாம்கபீநாம்ஸஹஸ்ராணி" என்கிறபடியே திக்குக்கள் தோறும் திரள்திரளாகப் போகவிடத்தக்க வாநரஸேனையையுடையவரென்கை. (உடனிருந்து) மால்யவானிலும் கிஷ்கிந்தையிலுமாகப் பிரிந்திருந்துபோய் பெருமாளுடன் கூடியிருந்து.

ஒத்தவரென்றும், புகழையுடைய வாநரக்கோனென்றும் அக்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி ஒத்தவரென்றதுக்கு சோகஹர்ஷங்களிலொத்தவரென்று தாத்பர்யமருளிச் செய்யக்கோலி அதுக்கு ஹேதுவைப்ரக்ருதோபயுக்தமாக வருளிச் செய்கிறார் (காண்பதற்கு முன்னே யித்யாதி). சோகஹர்ஷங்களொத்தவரென்றும் புகழன்றிக்கே, குணந்தரத்தால்வந்தபுகழ்-நினைத்தேடவென்றதுக்குப் புகழல்ல வென்று திருவுள்ளம்.ஸுக்ரீவனென்னாதே வாநரக்கோனென்றதுக்கு பாவத்தை யருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி வாக்யத்தாலே). "நினைத்தேட" என்றவநந்தரம் "ஆள் விடுகிறவளவில்" என்றத்யாஹாரம் திருவுள்ளம்பற்றி, அப்போது தம்மோடே தானே பெருமாள

(௧) ரா-கி-௪-௧அ. (௨) ரா-கி-௪-௧௯-
(௩) ரா-கி-௫-௧அ (௪) ரா-கி-௬-௩௦-௩.

ஜன். (உடனிருந்து) சேரவிருந்து. (நினைத்தேட) தேவரீரைத் தேடிக்கொண்டுவருவதாக.

(அத்தகு சீரித்யாதி) இந்த ஶோகத்துக்குத் தகுதியான வந்த சோகத்தையுடையராய், திருவயோத்யைக்கு நிர்வாஹகராக ப்ராப்தரானவர். (அடையாளமிவைமொழிந்தான்) அவன் மொழி

(நினைத்தேட) தேவரீரைத்தேடுகைக்காக. ஸர்வதிக்குக்களிலும் ஆள் விடுகிறவளவிலே, (௧) "விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந் - விசேஷேண துஸுக்ரீவோ ஹநூமத்யர்த்த முக்தவாந்" என்கிறபடியே எல்லாரையும் போலன்றிக்கே விசேஷித்து என்னையபிமானித்து "இவன் இக்காரியத்துக்கு ஸமர்த்தன்" என்று மஹாராஜர் திருவுள்ளம்பற்றினவநந்தரம்.

(அத்தகுசீரயோத்தியர்கோனடையாளமிவைமொழிந்தான்) தேவரீரைப்பிரிந்தபின்பு ஊணுமுறக்கமுமின்றிக்கே கடித்ததும் ஊர்ந்ததுமறியாதே ஏதேனுமொரு போக்யபதார்த்தங்களைக் கண்டால் தேவரீரை நினைத்து ஈடுபடாநின்றுள்ள அந்தநிலைக்குத் தகுதியான ப்ரணயித்வகுணத்தை யுடையராய், ஸ்ரீபரதாழ்வான் * அடிசூடுமரசாய்த் திருவடிநிலைகொண்டு போகையாலே திருவயோத்யையிலுள்ளார்க்குத் தாமேராஜாவான பெருமாள், விண்ணப்பஞ்செய்த இந்த வடையாளங்களெல்லாம் அடியேனுக்குத் தம்முடைய திருப்பவளத்தாலே யருளிச்செய்தார்; அல்லாதபோது * மல்லிகைமாமாலைகொண்டு அங்கார்த்தது அடியேனுக்கு அறியக்கூடுமோ?

டையாள மருளிச்செய்கைக்கு ஹேதுவையுமருளிச் செய்துகொண்டு தாத்பர்யமருளுகிறார் (தேவரீரையித்யாதி).

அத்தகுசீரென்றதுக்கு-ஒத்தபுகழென்றுசொன்ன புகழுக்குத்தக்ககல்யாணகுணமென்று சொல்லுமளவில் "அடையாளமிவை மொழிந்தான்" என்றதுக்கு ஹேதுவாகக் கூடாமையால் "அ" என்றதச்சப்தம் புத்திஸ்த்தபராமர்ஶியாக்கித்தாத்பர்யமருளுகிறார் (தேவரீரைப்பிரிந்தவித்யாதி). (பெருமாள்) என்றவநந்தரம் "நான்" என்று சேஷம். தம்முடைய திருப்பவளத்தாலே அருளிச்செய்தாரென்றதுக்கு நியாமகம் காட்டுகிறார் (அல்லாத வித்யாதி). இத்திருமொழியிலே திருவடியருளிச் செய்ததாகச்சொன்னவடையாளங்களெல்லாம் தமக்குப் பெருமாள் தாமே யருளிச்செய்ததாகச் சொன்னாரென்று மயர்வற

(௧) ரா-கி-௪௪-௧.

பெரியாழ்வார்திருமொழி, ௩-ப, ௧0-தி, அ-பா, மைத்தரு. அசக ந்தவடையாளங்களிவை. (இத்தகையாலடையாளம்) என்னால் விண்ணப்பம் செய்யலாமடையாளமிவ்வளவு. அவரருளிச்செய்த வற்றில் என்னால் தரிக்கலாவதும் விண்ணப்பம் செய்யலாவதும் இவ்வளவே. (ஈதவன் கைமோதிரமே) "அவர் திருவிரலில் சாத்தினவறுகாழியிது", என்று, "அடையாளங்களில் சங்கையில்லை. சங்கையுண்டாய்த்தாகிலும் தேவர்க்குத் தெளிய வேண்டுவதெல்லாம் போரும் இது" என்று! திருவாழியாலே ப்ராண ப்ரதிஷ்டை பண்ணுகிறான். ... .... .... .... .... (அ)

---

(இத்தகையா லடையாளம்) ஆனபின்பு, விண்ணப்பஞ்செய்த வடையாளமித்தனையும் இந்தப்ரகாரத்தாலே வந்ததென்று அறிவித்து. (ஈதவன்கைமோதிரமே) இது அவர்திருக்கையில் திருவாழி மோதிரமென்று, (க) "ராமநாமாங்கிதஞ்சேதம் பஶ்யதேவ்யங்குளீயகம் - ராமநாமாங்கிதஞ்சேதம் பஸ்யதேவ்யங்குளீயகம்" என்கிறபடியே பெருமாளுடைய திருநாமத்தாலே அங்கிதமாயிருக்கிற திருவாழிமோதிரத்தைக் கொடுத்தாளுய்த்து. ... (அ)

---

மதிநலமருளப்பெற்ற வாழ்வாரருளிச்செய்கையாலே ஸ்ரீராமாயணத்தில்பெருமாளருளிச் செய்ததாகவில்லாமலிருந்தாலும் இது கல்பாந்தரமென்றுகொள்வது. காகாஸுரவ்ருத்தாந்தத்தைப் பிராட்டி தாமடையாளமாகச் சொல்லியிருக்கையாலேயும் அந்தகாகவ்ருத்தாந்தம் பெருமாளருளிச் செய்ததாகச்சொன்னதுக்கும் கல்பாந்தரமென்கையாலே விரோதமில்லை.

"அடையாளமிவையித்தகையால் மொழிந்தான்" என்றந்வயித்துச்சொல்லுமளவில் "இத்தகையால்" என்றதுக்குவையர்த்த்யம் ப்ரஸங்கிக்கையால், ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாக்கி"அறிவித்து"என்றொருபதமத்யாஹரித்தர்த்தமருளுகிறார்(ஆனபின்பித்யாதி).மேல்பாட்டில்"உச்சிமேல்வைத்துக்கொண்டு உகந்தனள"என்றருளிச்செய்கைக்கநுகுணமாகஇப்பாட்டில"மோதிரமே"என்றவனந்தரம் "என்று கொடுத்தான்" என்றத்யாஹரித்தர்த்தமருளிச்செய்கிறார் (இது அவர் திருக்கையிலித்யாதி) ... ... ... (அ)

---

(க) ரா-ஸு-௩௬-௨.

மூ.—

திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள்
மிக்க பெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்டு
ஒக்குமாலடையாள மனுமானென் றுச்சிமேல்
வைத்துக்கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. (௯)

ஸ்வா;—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) திக்குநிறைந்த புகழையுடையவனென்று விஸ்வாமித்ரனுக்குப் பேரானபோது பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ண மான அண்ட நிர்வாஹகன் முதலானார் அநுவர்திக்கும்படியாகவும், ஒரு ருஷியாலே ஒருராஜா சண்டாளனாக அந்த சண்டாளந்தன்னையே வாரேயுறுப்பாகயஜிப்பித்து, அந்தஶரீரத்தோடே ஸ்வர்க்கமேற்றி, "ஸ்வம்ஸ-த்வம்ஸ" என்கிறவளவிலும் "நில்" என்னவல்லனாகையாலும், ராஜர்ஷியானதான் ப்ரஹ்மர்ஷியாகையாலும், க்ஷத்ரியத்வம்பின்னாட்டாமையாலும், அண்டாந்தர்கதமான விந்ததிக்குக்களெல்லாம் தபஃபலமாக நிறைந்த புகழையுடையவனென்னவுமாம். ஒரு ராஜாவை சண்டாளனாக்கி, ஒரு சண்டாளனை ப்ராஹ்மணனாக்கவல்லவனுடைய ஶாபத்தையிறே இவனிப்படிசெய்தது; ஆகையால்தபஸ்ஸுக்கள் ஔபாதிகமானால் எல்லாம் செய்யலாமிறே. அன்றிக்கே பெருமாளானபோது அண்டாந்தர்கத மாயன்றே புகழிருப்பது. அந்த விஸ்வாமித்ரன் பெருமாளை (௧) "அஹம்வேத்மி-அஹம்வேத்மி" என்கிறபோது "ம

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) தத்வஜ்ஞாநத்தாலும், ப்ராக்ருதவிஷய வைராக்யத்தாலும், முமுக்ஷுவாய் பலாபிஸந்திரஹிதமாக கர்மாநுஷ்ட்டாநங்களைப்பண்ணிக்கொண்டு போருகையாலும், ஸர்வதிக்குக்களிலும் நிறைந்த புகழையுடையனை ஸ்ரீஜநகராஜனுடைய ஆஹவநீயாத்யக்நித்ரயத்தோடே பண்ணும் யாகத்திலே விஸ்வாமித்ரமஹர்ஷிகொண்டு செல்ல, எழுந்தருளின

அரு;—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) "திக்கு-திக்குக்கள் தோறும் நிறை-பூர்ணமான, புகழாளன்-யஶஸ்ஸையுடையவனானவன், அப்படிப்பட்ட ஜநகமஹாராஜருடைய தீயோடுகூடின வேள்வி-யாகத்தில் பெருமாள் சென்ற நாளிலே" என்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ஜநகனென்றுதே "திக்கு நிறை புகழாளன்" என்றதுக்கு ஹேதுக்களைக்காட்டா நின்று கொண்டு அர்த்தமருளுகிறார் (தத்வஜ்ஞாநத்தாலுமித்யாதி). பெருமாள் மோதிரமென்னுதே

(௧) ரா-பா-௧௯-௧௪.

ஹாத்மா” “ஸத்யபராக்ரமர்” என்றறிவேன். மஹாதேஜஸ்விகளான வஸிஷ்ட்டாதிகளும் மற்றுமோரோதபஸ்ஸுக்களில் நிலைநின்றவர்களும் அறிவார்களென்றுனிறே. (தீவேழ்வியித்யாதி) யஞ்ஜத்தில் அக்நிஹோத்ரரக்ஷணவ்யாஜமாக விஶ்வாமித்ரன்பின்னே சென்றநாள். (மிக்கவித்யாதி) ப்ராஹ்மணரும் க்ஷத்ரியரும்திரண்டபெரிய திரள் நடுவே சென்று வில்லை முறித்துப் பாணிக்ரஹணம் செய்கிறபோது திருக்கண்களாலே ரூபமும் திருக்கைகளாலே ஸ்பர்ஶமும் கண்டு.

(ஒக்குமித்யாதி) நீ முன்பு சொன்னவடையாளங்களும்நான் பாணிக்ரஹணகாலத்தில் கண்டதும்; [ஹஸ்தோ: கூாவிஹ-ூஷண(ூ-பர் துஃகரவிபூஷணம்] “இது அவன் கைமோதிரம்” என்று தந்த

காலத்திலே. (மிக்கபெரும் சவைநடுவே) மிகவும்பெரிய ஸபாமத்யத்திலே. (வில் இறுத்தான் மோதிரங்கண்டு) தனக்கு ஶுல்மாகக் கல்பித்திருந்த வில்லை முறித்த பெருமாளுடைய திருக்கையிலே அப்போது கிடந்ததாய், பின்பு பாணிக்ரஹணம் பண்ணுகிறபோது தன்கையிலே உறுத்தினதாய், ஸர்வகாலமும் பெருமாள் திருக்கையிலே கிடக்குமதான திருவாழிமோதிரத்தைக்கண்டு.

(ஒக்குமித்யாதி) அநுமானே! நீமுன்பு சொன்னவடையாளங்களும் திருவாழிமோதிரத்திலடையாளமும் ஒக்குமென்று அவன் முகத்தைப் பார்த்துச்சொல்லி, (க) “ம்ருஹீக்ஷா வெருக்ஷோணாவலா

“வில்லிறுத்தான் மோதிரம்” என்றதுக்கு ப்ரயோஜந மருளுகிறுர் (தனக்கித்யாதி).

“அனுமான் அடையாள மொக்குமென்றுச்சிமேல் வைத்துக் கொண்டு மலர்க்குழலாள் சீதையுமுகந்தனளால்” என்றந்வயம் திருவுள்ளம்பற்றி ப்ரமாண பூர்வகமர்த்தமருளிச் செய்கிறுர் ( அநுமானே யித்யாதி). (திருவாழிமோதிரத்திலயையாடளம்) என்றது - பெருமாள் திருநாமத்தை, உச்சிமேல் வைத்துக்கொண்ட வநந்தரம்“மலர்க்குழலாளாய் உகந்தனள்” என்றுசொன்னதுக்கு பாவநாப்ரகர்ஷம் ஹேதுவென்று திருவுள்ளம்பற்றி, அது இவ்வசநத்தில் தோற்றுமென்று வசநத்தை யருளுகிறுர் ( க்ருஹீத்வேத்யாதி ).

(க) ரா-ஸு-௩௬-௪.

பின்பு "அநுமான்" என்று ப்ரீதியோடே வாங்கித்திருக்குழலிலே வைத்துக்கொண்டு பெருமாளோடே ஒருபடுக்கையிலே யிருந்து அவரலங்கரிக்க, பூமுடித்தாப்போலே யிருந்தாள். மண்ணில் பரிமளம் வடிவுகொண்டாப்போலேயிறே வடிவுதானிருப்பது. மணந்தான் கந்தகுணியாயிறே யிருப்பது. அபியாலே இருவரையும் காட்டுகிறது-

---

𑌭𑌰𑍍𑌤𑍃𑌕𑌰𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 । 𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌿𑌵 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾 𑌜𑌾𑌨𑌕𑍀 𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌭𑌵𑌤𑍍 - க்ருஹீத்வாப்ரேக்ஷமாணாஸா பர்த்ருகரவிபூஷணம் । பர்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத்." என்கிறபடியே-அத்திருவாழிமோதிரத்தை வாங்கி அதினுடைய கௌரவமும் தன்னுடைய ஆதரமும் தோற்றத் தலைமேலே வைத்துக்கொண்டு, பின்னை அத்தைக் கையிலேயேந்தி, வைத்தகண்மாறாமல் பார்த்துக்கொண்டிருக்கையாலே அத்திருவாழிமோதிரத்தோடுசேர்ந்ததிருக்கைவிரலையும் அத்தோடு சேர்ந்ததிருக்கையையும் அத்தோடுசேர்ந்த திருத்தோள்களையும் நினையாநின்று கொண்டு, அவ்வழியாலே திருமேனியெல்லாவற்றையும் நினைத்து, பாவநாப்ரகர்ஷத்தாலே பெருமாள்

---

𑌭𑌰𑍍𑌤𑍃𑌕𑌰𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌂 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾, 𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌾-𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌈𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌾-பர்துகரவிபூஷணம்க்ருஹீத்வா, ப்ரேக்ஷமாணா-ப்ரகர்ஷேண ஈக்ஷமாணா] வைத்தகண் வாங்காதே பார்த்துக் கொண்டிருக்குமவள், [𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌾 𑌜𑌾𑌨𑌕𑍀 𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍇𑌵 𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌭𑌵𑌤𑍍 ஏவம்பூதாஜாநகீ பர்தாரம்ப்ராப்தேவமுதிதாபவத்] ப்ராப்தாவென்றது - ஸம்யக்ப்ராப்தாவென்றாய், ஒரு படுக்கையிலே பெருமாளையடைந்தவளென்றபடி. ஒரு படுக்கையிலே யடைந்தாப்போலே இவள் ஸந்துஷ்டையாகிறபடி சொல்லுகையாலே பெருமாளுடைய திருவாழிமோதிரத்தைக்கண்டபின்பு அவருடைய திருக்கையையும் அத்தாலே திருத்தோளும் அப்படி மேன்மேலும் திவ்யாவயவங்கள் திவ்யமங்கள விக்ரஹம், இவற்றைத் திருவுள்ளத்திலேபாவித்து, முதிதையானளென்றுகொள்ளவேணுமென்று கருத்து. இவ்வர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றி "உச்சிமேல் வைத்துமலர்க்குழலாளாயுகந்தனளால்" என்னுமிவற்றுக்கர்த்தமருளுகிறார் (திருவாழிமோதிரத்தை யித்யாதி). சீதையுமென்றது இப்படி க்லேசித்தவளென்றாய், அவளுமொருபடி க்லேசம் தீர்ந்து உகந்தாளேயென்று ஆஶ்சர்யப்படுகிறாரென்று கருத்து. ... (௬)

மூ.—வாராருமுலைமடவாள் வைதேவிதனைக்கண்டு
சீராருந்திறலனுமன் தெரிந்துரைத்த வடையாளம்
பாராரும புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான் பாடல்வல்லார்
ஏராரும் வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே. (௧0)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அவ;—நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித்தலைக் கட்டுகிறார்.

ஸ்வா —(வாராரித்யாதி) முன்பெல்லாம் நெகிழ்ந்து கிடந்த கச்சு திருக்குழலிலே திருவாழிமோதிரம் சேர்ந்த பாவநாப்ரகர்ஷத்தாலே திருமுலைத்தடங்கள் விம்மிநிறைந்த தென்றுதோற்றுகிறது. "மடவாள்" என்று முற்பட்ட வொடுக்கமாதல். ஸ்த்ரீத்வமாதல். (வைதேவிதனைக் கண்டு) தேஹநிபந்தநமான ஸ்த்தூலகார்ஶ்யங்களை மதியாத குடிப்பிறப்பையுடையவளை. (தனைக்கண்டு) அந்தꣳபுரகார்யம் தலைக்கட்டுகையாலே ராமதாஸன் என்று தன்னையும் கண்டென்னுதல். இவளைக் கண்டாலல்லது பெருமாளையும் காணவொண்ணாமையாலே இருவரையும் கண்டென்னுதல். (சீராருமித்யாதி) (௧) "நவஸஜ்ஜ-ஹ்ருதꣳ வநாꣳ-நசஸங்குசிதꣳ பந்தாꣳ"

---

அலங்கரிக்கப் பூமுடித்து ஒருபடுக்கையிலே யிருந்தாப்போலே தோன்றி, பிராட்டி மிகவும் ப்ரீதையானாளென்று ஆஶ்சர்யப்பட்டருளிச் செய்கிறார். .... .... .... .... (௬)

அவ. — நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப்பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா;—பத்தாம்பாட்டு. (வாராருமித்யாதி) வாரோடு சேர்ந் திருக்கைக்கு யோக்யமாயிருக்கச்செய்தே, இப்போதுவெறும்புறததிலே யிராநிற்பதான முலையையுடையளாய், விரஹத்தால்வந்த துவட்சியையு முடையளாய்,தேஹத்தில் உபேக்ஷையாலே விதேஹபுத்ரியானமை தோற்றவிருக்கிற பிராட்டியைக்கண்டு. (சீராரும் திறலனுமன்) முதலிகளெல்லாரு முண்டாயிருக்க "இவனே இக்கா

---

அரு;—பத்தாம்பாட்டு. (வாராருமித்யாதி) "சீரென்று-ஜ்ஞாநாதிகளாய், அத்தால் ஆர்-பூர்ணனாய், திறல்-மிடுக்கையுடையவன்" என்று ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ஹேது பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (முதலிகளித்யாதி). இத்திருமொழியில் திருவடி வார்த்தையாக முடியவில்லாமலி

---

(௧) ரா.

என்னவேண்டாதசீர். (௧) "𑌨 𑌤𑍍𑌯𑌜𑍇𑌯𑌂 𑌕𑌥𑌞𑍍𑌚𑌨। 𑌦𑍋𑌷𑍋 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌤𑌾𑌮𑍇𑌤𑌦𑌗𑌰𑍍𑌹𑌿𑌤𑌮𑍍-நத்யஜேயம் கதஞ்சநதோஷோ யத்யபிதஸ்யஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்" என்றவர்க்குப்ராண பர்யந்தமாகப் பரியாதசீர். "𑌵𑌧𑍍𑌯𑌤𑌾𑌂-வத்யதாம்" என்றபரிவர்க்கும் பெருமாள் தமக்கும் ப்ராணனையுண்டாக்கினசீர். (௨) "𑌕𑌿𑌂 𑌕𑍋𑌪𑌮𑍂𑌲𑌂 𑌮𑌨𑍁𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍁𑌤𑍍𑌰 - கிம் கோப மூலம்மநுஜேந்த்ர புத்ர" என்று இளைய பெருமாள் ஸந்நிதியிலே நிற்கும்படி தம்பதிகளை ஸாரஜ்ஞகமாக்கின சீர். (ஆரும்) நிறையும். ஆஶ்ரயத்திலே சேருவதற்கு முன்னே† ஆர்ந்த தென்னலாயிறேதோற்றுகிறது. (திறல்) ஔஷதபாவதங்கள் நிமித்தமாகச் செய்த ஸாமர்த்யங்களென்னுதல். எழியிலுண்டானவிரோதிவர்கங்களை நீக்கிப்போந்த ஸாமர்த்ய மென்னுதல். (அநுமன்) வீரத்தழும்புசுமக்கவல்லவன்.

(தெரிந்தித்யாதி) பெருமாளருளிச்செய்தவற்றில்தான் தரித்தவற்றில்சொல்லலாமவற்றில் சொல்லவேண்டுமடையாளமிறே தெரிந்துரைத்ததும். (பாராருமித்யாதி) உபயவிபூதியும் நிறைந்த புகழையும்திருமாளிகையும்பட்டர்பிரானென்கிற திருநாமத்தையுமுடைய ஆழ்வார், பெருமாளுக்கும்நாய்ச்சிமாருக்கும்திருவடிக்குமுண்டான விசேஷகுணங்களைச் சேர்த்தருளிச்செய்த விப்பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லார். (ஏராரித்யாதி) எல்லாநன்மைகளும்சேர்

---

ரியம் செய்யவல்லான்" என்று பெருமாள் திருவுள்ளம்பற்றி அடையாளங்களும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்துவிடும்படி ஜ்ஞாநாதி குணங்களால் பரிபூர்ணனாய், நினைத்ததுமுடிக்கவல்ல சக்திமானாயிருக்கிற திருவடி.

(தெரிந்துரைத்தவடையாளம்) பெருமாளருளிச் செய்தபடிகளில் ஒன்றும் தப்பாமல் ஆராய்ந்து பிராட்டிக்கு விஶ்வஸநீயமாக விண்ணப்பம் செய்த வடையாளங்களை. (பாராருமித்யாதி) பூமியெங்கும் நிறைந்த புகழையுடையரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த பாடலானவிப்பத்தை ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (ஏராருமித்யாதி) எல்லாநன்மைகளும் சேர்ந்த பரமபதத்திலே, (௩) "அடியரோடிருந்தமை" என்கிறபடி

(௧) ரா-யு-௧௮-௩. (௨) ரா-கி-௩௩-௪௦. (௩) தி-வாய்-௧௦-௯-௧௧.
† (பா) ஆராய்ந்த.

பெரியாழ்வார்திருமொழி, ௩-௰, ௧௦-தி, ௧௦-பா, வாரார்ரும். அசஎ

ந்தபரமபதத்திலே*அந்தமில் பேரின்பத்தடியரோடே ஆநந்தநிர்பரராய் * சூழ்ந்திருந்தேத்தப் பெறுவரென்கிறது. .... (௧௦)

பிள்ளை திருவடிகளேசரணம்.

## பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்துக்கு திருவாய் மொழிப்பிள்ளை அருளிச்செய்த ஸ்வாபதேச வ்யாக்யாநம் முற்றிற்று.

---

யே-நிரந்தரபகவதநுபவபரரான நித்யஸூரிகளோடு ஒரு கோவையாயிருக்கப்பெறுவர். .... ... .... (௧௦)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்தின் பெரியஜீயர் அருளிச்செய்த வ்யாக்யாநம் முற்றிற்று.

——[:*:]——

---

ருந்தாலும், ப்ராயிகாபிப்ராயத்தாலே எல்லாம் திருவடி வார்த்தையாகச் சொல்லலாமென்று கண்டுகொள்வது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

——(*)——

## ஜீயர் அருளிச்செய்த அரும்பத விளக்கம் முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து முதல் திருமொழி கதிராயிரம் ப்ரவேசம்.

அவ;—ஆசார்யனானவன் பகவத்வாக்யங்களாலும் மந்த்ரோபதேசத்தாலும் ஸ்வரூப ஜ்ஞாநபர்யந்தமாக ருச்யுத்பாதநம் செய்து சேதநனை உகப்பித்து தத்த்வாராஈஸ்வரனையு முகப்பித்த ப்ரகாரத்தைத் திருவடிவ்யாஜத்தாலே இரண்டு தலையையும் தனித்தனியே (க)"வைஶ்ரவணேந ஸம்ஶ்லேஷ்டும் — பஶ்யதேவ்யங்குளீயகம்" என்றும், (உ) "த்ருஷ்டா ஸீதா - த்ருஷ்டாஸீதா" என்னும் உகப்பித்தப்ரகாரத்தை யருளிச்செய்தாராய் நின்றார் கீழில் திருமொழியில்;

## நாலாம்பத்து - முதற்றிருமொழி கதிராயிரமிரவி ப்ரவேசம்.

அவ,—க்ருஷ்ணவதாரைகப்ரவணராய், திருவவதாரஸமயமே தொடங்கி அவ்வவதார ரஸமே அநுபவித்துக்கொண்டு போந்தவர், க்ருஷ்ணவதார சேஷ்டிதங்களையும் ராமாவதார சேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே அநுபவிக்கவேணு மென்னும்படியாயிருப்பதொரு அபிநிவேசம் பிறந்து, அவை தான் ஏகாஶ்ரயத்தில் விட்டு அநுபவிக்கப் போகாமையாலே இரண்டு வடிவுகொண்டு ஒன்றுக்கொன்று எதிரியாகப்பேசி அநுபவித்த வநந்தரம், ராமாவதாராநுகுணமாக வந்தவதரித்தருளின பிராட்டி, தன்னுடைய புருஷகாரத்வத்துக்கு ப்ரதாநகுணமான க்ருபையை வெளியிடுகைக்காக "ராவணன்பிரித்தான்" என்று ஒருவ்யாஜத்தாலே லங்கையிலே

---

நாலாம்பத்து முதல்திருமொழி, கதிராயிரம் ப்ரவேசம்.

—[*]—

அரு;—கதிராயிரம்ப்ரவேசம். வண்ணமாடங்கள் தொடங்கி க்ருஷ்ணவதாரத்தை அநுபவித்தவாறே அதுக்கு அவ்யவஹித பூர்வமான ராமாவதார குணசேஷ்டிதங்களை அநுபவித்துத் ததந்தர்கதமான பிராட்டியுடைய திருவாழி மோதிரம் கண்டத்தாலுண்டான வுகப்பையுமநுபவித்த விவர் தர்மியைச்யத்தாலே நெஞ்சில் பட்ட வவதாராந்தராபதாநாந்தரங்களையும் அநுபவிக்கிறுரென்று ஸங்கதியருளுகிறுர் (க்ருஷ்ணவதாரேத்யாதி).

---

(க) ரா-ஸு-ருக-உ. (உ) ரா-பா-க-எஅ.

வ்யா;—

யெழுந்தருள, அவ்வவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் அவள்போனவிடம் இன்னவிடமென்றறியாமல் தேடிக்கொண்டு திரியாநிற்க, மஹாராஜரோடே உறவுசெய்தவநந்தரம் அவருடைய ஸர்வபரிகரத்தையும் திரட்டி திக்குக்கள்தோறும் தேடும்படி வகை வகையாகப் போகவிடுகிறவளவிலே, பெருமாள், திருவடியினுடைய புத்திஶக்த்யாதிகளைக்கண்டு "இவனே இக்கார்யம் செய்து முடிக்கவல்லான்" என்று திருவுள்ளம்பற்றி, பிராட்டியைக்கண்டால் விண்ணப்பஞ்செய்யத்தக்கதாக வடையாளங்களையு மருளிச்செய்து திருவாழிமோதிரத்தையும் கொடுத்தும்போகவிட, திருவடியும் லங்கையிலேசென்று பிராட்டியைக்கண்டு திருவடி தொழுது, ராவணன்மாயையால் வந்தவதிசங்கைதீரும்படி பெருமாளருளிச்செய்த அடையாளங்களையெல்லாம் விண்ணப்பம்செய்து, திருவாழிமோதிரத்தையும் கொடுத்து, பிராட்டி திருவுள்ளத்தை மிகவும் உகப்பித்த ப்ரகாரத்தை அநுஸந்தித்து, அந்தஃபுரகைங்கர்ய ரஸத்திலுண்டான வாசையாலே பிராட்டிக்குத் திருவடிவிண்ணப்பஞ்செய்த வடையாளங்களையும், திருவாழிமோதிரம் கொடுத்தபடியையும், அது கண்டு பிராட்டிதிருவுள்ளமுகந்தபடியையுமெல்லாம் அடைவேபேசியநுபவித்துப்ரீதரானார் - கீழில் திருமொழியிலே.

ராமக்ருஷ்ணாவதாரங்களோடு அவதாராந்தரங்களோடு அபதாநாந்தரங்களோடுவாசியற தர்ம்யைக்யத்தாலே எல்லாம் ஏகாஶ்ரயகதமாகையாலே "இப்படியிருக்கிற விஷயத்தைக் கண்ணாலே கண்டநுபவிக்கவேணும்" என்றுதேடுகையாகிறவிது தமக்குஒருபுடை சொல்லுகிறபடியையும், மாநஸாநுபவத்தினுடைய கரைபுரட்சியாலே அவ்விஷயந்தன்னை ஸுஸ்பஷ்டமாகக் கண்டதாகவே ஒருபுடை தோற்றியிருக்கிறபடியையு மநுஸந்தித்து, அவையிரண்டையும், அவதாராதிவிசிஷ்டனாக ஸர்வேஶ்வரனைக் கண்ணாலே காணவேணுமென்று தேடித்திரிகிறார் சிலரும், "அப்படி தேடுகிறீர்கோளாகில் அவனை உள்ளபடி கண்டாருளர்" என்று சொல்லுகிறார் சிலருமாகக்கொண்டு, தம்மை இரண்டுவகையாக வகுத்து

(ஒருபுடை) என்றது-ஒருப்ரகாரமென்றபடி. (கரைபுரட்சியாலே) ஆதிக்யத்தாலே. (தம்மையிரண்டு வகையாக வகுத்து) என்றதுக்கு இந்த ஸ்பஷ்டாஸ்பஷ்டாநுபவங்களிரண்டுமொரு வகையிலேசேராமையாலிரண்டு வகை

இதில் அங்ஙன் தனித்தனிகாணாமல் இருவரையும் சேரக்காண வேணுமென்று தாம்விரும்பின ப்ராகரத்தைத் தமக்கு ஸ்நேஹிகளாய், பகவத்வாக்யங்களாலும்ஆசார்யமுகத்தாலும்"உபாயோபேயங்கள் அவனே" என்றறுதியிட்டசேதநர் ப்ரதமபதத்திலர்த்தபலத்தாலே காண்கிறவளவேயன்றிஏகாயநர் நீஸதர்ஸநம்போலன்றிக்லேஸாப்தமாக மிதுநவிஷயத்தைக்காணலாமோவென்றபேக்ஷிக்க உத்தரபூர்வவாக்யங்களை தர்ஸிப்பிக்க தர்ஸித்துத்தெளிந்திருக்கச் செய்தேயும் அவ்வளவிலும் பர்யவஸியாமல்அபிநிவேசம்மிக்கு, மணக்கால் நம்பிகளைப்பெரியமுதலியார்"இவ்விஷயத்தைப்ராமணிகர்க்கும்ஸாக்ஷாத்கரிக்கலாமோ?" என்று கேட்டாப்போலே தர்ஸிப்பித்தவாசார்யனைக்கேட்க, அவனும் * "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டசதிர் பரத்வத்திலேயும் கண்டேன்" என்றும், (க) "மலையாலணை செய்திலங்கை மலங்கவோர் வாளிதொட்டானை நாங்கைநன்னடுவுள் செம்பொன் செய்கோயிலினுள்ளே அல்லிமாமலராள் தன்னொடுமடியேன் கண்டு கொண்டல்லல்தீர்ந்தேன்" என்றும், (உ) "சந்தணிமென்முலைமலராள் தரணிமங்கைதாமிருவரடிவருடும் தன்மையானைத்திருக்கோவலூரதனுள்கண்டேன்" என்றும், (௩) "நீயும் திருமகளும் நின்றாயால்" என்றும், !"பரத்வவிபவங்களிலும்கட்கண்ணால்காண்கிறவளவன்றிஉட்கண்ணுணரும் அர்சாவதாரங்களிலும் மங்களாசாஸநமாக கண்டாருளர்" என்றதாலேதாமும்அத்யந்தம் ப்ரீதராய், "திருவாய்ப்பாடியில் பெண்கள் நந்தன் மதலையைக் காகுத்தனைநவின்று உந்தி பறந்துகுணு

---

நின்றுபேசி இனியராகிறார் - இத்திருமொழியில். "நாடுதிரேல்", என்றும் "கண்டாருளர்" என்றும் பன்மையாகவருளிச்செய்தது - *கட்கண்ணால் காண்கையில் அபேக்ஷாரூபஜ்ஞாந வ்யக்திகளும், *உட்கண்ணால் கண்டு அதிலாற்றத்தாலே பாஹ்யாநுபவமும் ஸித்தித்ததென்று தோற்றும்படியான ஜ்ஞாநவ்யக்திகளும் பலவுமுண்டாகையாலே. .... .... .... ... *

---

யாக்கினாரென்று கருத்து. இரண்டு வகையாக வநுபவிக்குமிடத்தில் ஒரு வகைக்கு ஏகவசநஞ் சொல்லவேண்டியிருக்க பஹுவசநம் சொல்லக்கூடுமோவென்ன வருளுகிறார் (நாடுதிரேலித்யாதி). ... ... ... *

---

(க) தி-மொ-௪-௩-௬. (உ) தி-மொ-௨-௧௦-௨. (௩) க-திருவ-௮௬.

மூ.—கதிராயிரமிரவி கலந்தெறித்தா லொத்தநீண்முடியன்
எதிரில்பெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல்
அதிருங்கழற்பொருதோ ளிரணியனாகம்பிளந்தரியாய்
உதிரமளைந்தகையோடிருந்தானை யுள்ளவாகண்டாருளர். (க)

நுபவம் பண்ணினவர்கள், மற்றும் ஜந்மாந்தரஸம்ஸ்காரோபாஸந ஸித்தரானவர்கள் ஒருவர்க்கொருவரபேக்ஷையுண்டாகில் கண்டாருளர்'' என்னும் அந்யாபதேசத்தாலே மநோரதித்து அருளிச்செய்து இனியராகிறார்- *

அவ;—முதற்பாட்டு. (கதிரித்யாதி). இவருடைய மநோரதந்தான் இருவரையும் சேர்த்துத்திருவபிஷேகம் திவ்யாயுதாழ்வார்களோடே க்ருஷ்ணாவதாரத்தையும் காணவேணுமென்றும், மகர ஸிம்ஹவராஹாவதாரங்களிலும் இப்படி காணவேணுமென்றும் தாம் விரும்பின ப்ரகாரம் தமக்கு ஸ்நேஹிகளாயிருப்பாரளவிலும் சென்றதுகண்டு, ப்ரீதராய்க் கீழ்ச்சொன்ன வந்யாபதேசத்தாலே ''அவன் திருமார்விலும் பார்ஶ்வத்திலும் கண்டார்கள் ஒருதஶா விசேஷங்களிலே'' என்றநுஸந்தித்து இனியராகிறார். இப்பாட்டால் பெருமாள் தாமும் பிராட்டியும் சேரவெழுந்தருளித் திருவபிஷேகம் செய்தருளி * திருமகளோடினிதமர்ந்த செல்வுக்கு மங்களாசாஸநம் செய்கிறார்.

ஸ்வா;—(கதிரித்யாதி) ''ஸஹஸ்ரகிரணராயிருக்கும் அநேகம் பாலாதித்யர்களை உருக்கிவார்த்தப்ரகாஶமோ'' என்றநுஸந்தித்து அதுவும் போராமையாலே நீண்முடியென்கிறார். (எதிரிலித்யாதி)

வ்யா;—முதற்பாட்டு. (கதிரித்யாதி) ஸஹஸ்ரகிரணங்களான ஆயிரமாதித்யர்கள் சேர ப்ரகாசித்தாப்போலேயிருக்கும் தேஜஸ்ஸையுடைத்தாய் ஆதிராஜ்யஸூசகமான ஒக்கத்தையுடைத்தான

அரு;—முதற்பாட்டு.(கதிராயிரம்) ''ஆயிரம்;' என்றதை ''கதிர்'' என்றதோடும், ''இரவி''என்றதோடுமநுஷங்கித்து சப்தார்த்தமருளுகிறார் (ஸஹஸ்ரேத்யாதி). திருமுடிக்குத்தக்கதான திருவபிஷேகத்துக்கு அதிகமான நீட்சியைச் சொல்லக்கூடாமையாலே ஆதிராஜ்ய ஸூசகமான வதிசயத்தைச் சொல்லிற்றென்கிறார் (ஆதிராஜ்யேத்யாதி), கீழ்த்திருமொழியிலே மால்யவானிலேயிருந்த பெருமாளனுப்புவித்த திருவாழி மோதிரத்தைக் கண்டு அஶோகவநிகையிலே யிருந்த பிராட்டி உகப்பை அநுபவித்தவர்

சத்ருக்களில்லாத வளவேயன்றிக்கே ஸாதர்ம்யத்ருஷ்டாந்தமும் ஏகதேஸத்ருஷ்டாந்தமும் வைதர்ம்யத்ருஷ்டாந்தமு மில்லாதவனாய்; ஸமஸ்தகல்யாணகுணங்களுக்கு மாஶ்ரயபூதனாயிருக்கையாலே. ஶத்ருமித்ர உதாஸீநாத்மகமாய், உட்காச்சலும் புறம்பொசிவும் எதிருன்றனும் ப்ரஹ்மலோகபர்யந்தமாகக் காணலாயிறே யிருப்பது. அப்படியிருக்கிறவர்களெல்லாரும் ஒருவரிருவரொழிய நெஞ்சாலும் ரமிக்கும்படியாயிறே இராமனென்கிற திருநாமமிருப்பது. ஒருவரிருவரைப்பொறுத்தலூரிலே யிருந்த தோஷமேயிறே திருவயோத்யைக்குள்ளது. அதுதானும் ஸ்ரீபரதாழ்வான்வந்து போய் வருமளவுமிறே உள்ளது, பின்னை ராவணாதிகளுமில்லையோ வென்னில்,(௧)"யந்நஷாய-யி-தநுஷாயுதி" "ஸவெத்ரநயொகாநு ஸத்யேநலோகாந்" எல்லாரையும் ஜயத்தோடே ரமிப்பிக்கவேணும்; எல்லாத்துக்குமடிஜிதேந்த்ரியத்வமும் ஔதார்யமுமிறே. [ஸ்ரீநாநு

---

திருவபிஷேகத்தை யுடையவன். இத்தால் - ராவணவதம்பண்ணி ஸ்ரீ விபீஷணாழ்வானை லங்கைக்கு ராஜாவாக அபிஷேகஞ்செய்து, பிராட்டியும் தாமுமான சேர்த்தியோடே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருவபிஷேகம் பண்ணியிருந்த படியைச் சொல்லுகிறது. (எதிரில்பெருமையிராமனை) ஸ்வரூபகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும் ஒப்பில்லாத வைபவத்தையுடையனாய், எல்லாருடைய நெஞ்சுகளையும் ஸ்வவைலக்ஷ

---

இங்கே திருவபிஷேகமாத்ரம் சொல்லுகைக்குத் தாத்பர்யமேதென்ன வருளுகிறார் (இத்தாலித்யாதி). அன்றிக்கே, அவதாரங்களை யெல்லாம் அநுபவிக்குமவர் ராமாவதாரத்தில் பட்டாபிஷேகத்தை யநுபவிக்கக்கூடுமோ வென்னவருளுகிறார்(இத்தாலியாதி)ராவணவதம் சொன்னது உபலக்ஷணமாய்,அவதாரமே தொடங்கி அநுபவித்துக்கொண்டுவந்தாரென்றுகருத்து. (அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும்) என்றது-ஜடாயு மோக்ஷப்ரதாநம், கடலையணை கட்டுகை, சராசரங்களை வைகுந்தத் தேற்றுகை முதலானவற்றைச்சொல்லுகிறது. "ரமயதீதி-ராமஃ" என்கிறவ்யுத்பத்தியைத் திருவுள்ளம்பற்றி இன்னார்க்கென்றுவிசேஷியாமையாலே எல்லாருக்குமென்று விவக்ஷித்தர்த்தமருளுகிறார் (எல்லாருடையவுமித்யாதி).

---

(௧) ரா-அயோ-௧௨-௨௯.

சாடுநந-திநாந்தாநே] ஸ்வாஶ்ரயமானவிக்ரஹங்களும் ஒவ்வொருதஶைகளிலே ஔதார்யாங்வேஷிகள்ாயிறே யிருப்பது. "பெருமாள்ஶௌர்யத்துக்கு ராவணன் எதிர்போரான்" என்கிறகுறைவு தீரஹிரண்யனை ஒரெதிருமாக்கி, அவனை ஜயித்ததை ஶௌர்யமாக்கி, தர்ம்யைக்யத்தாலேஒரெதிரியையும்பெற்று ஜயித்ததும் தம்பேறாகவநுஸந்திக்கிறார். (இருக்குமிடம்நாடுதிரேல்) ஆஶ்ரிதவிரோதிகளிருக்குமிடம் சென்று அழியச்செய்தாலும் மறுவவிடாமல் பரிஹாரம் செய்யுமளவும் அதுக்குத் தகுதியாகக்கொண்ட வேஷத்தோடே அங்கேயிறே இருப்பது. அவ்விடம் விரும்பித் தேடுகிறிகோளாகில்,

(அதிரும்கழலித்யாதி) க்ஷீராப்தியில் பரஸம்ருத்த்யஸஹத்வம் குறுமிழிக்கொள்ளும்படியானப்ரச்சந்நவேஷம்குலைந்துவெளிப்பட்டு லோகங்களெல்லாம் நடுங்கும்படி (க)"திண்கழல்கால்" என்னும்படி வீரக்கழலிட்டவதிர்த்தியும்யுத்தகண்டூதிஶமியாததோள்களுமாய் ஆஶ்ரிதவர்க்கங்களை * பள்ளியிலோதிவந்ததன் சிறுவனளவாகவும் நலிகையாலேயிறே அதுக்குத் தகுதியானந்ருஸிம்ஹமாய், ஹிரண்யனுடைய வரபுலபுஜபலங்களாலேஊட்டியாகவளர்த்த

ண்யத்தாலேரமிப்பிக்கும் ஸ்வபாவனுமாகையாலே "ராமன்" என்னும்திருநாமத்தையுடையவனை. (இருக்குமிடம் நாடுதிரேல்) எழுந்தருளியிருக்குமிடம் தேடுகிறிகோளாகில்.

(அதிருங்கழல் பொருதோளிரணியனாகம்பிளந்தரியாய்) ப்ரஹ்மலோகபர்யந்தமாக எல்லாரையும் தன் கீழாக்கி ஈஶ்வரனாயிருந்தவனாகையாலே, த்வநியாநின்றுள்ள வீரக்கழலையுடையனாய், தனக்கு ஒரெதிரியில்லாமையாலே யுத்தகண்டூதி வர்த்தியாநின்றுள்ள தோள்களையுடையனாயிருந்துள்ள ஹிரண்யனுடைய வரபலபுஜபலங்களாலே பூண்கட்டியிருந்த மார்வை, தேவர்கள்கொடுத்தவரத்

(அதிரும்) சப்தியாநின்றுள்ள-"கழல்-வீரக்கழலென்கிறவாபரணத்தையுடையனாய், பொரும்-யுத்தத்தையே நினைக்கிறதோளையுடையனான விரணியனுடைய, ஆகம்-மார்வை, அரியாய் பிளந்து" என்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ஹேதுக்களோடே கூடத் தாத்பர்யங்களை யருளுகிறார் (ப்ரஹ்மலோகேத்யாதி). உதிரமளைகைக்கு ஹேதுவையும், அளைந்த ப்ரகாரத்தை

(க) தி-வா-௬-௫-௨.

ஶரீரத்தை, ஒருஸுவர்ணகிரியை ஒரு ரஜதகிரி அநாயாஸேநபிளந்தாப்போலே பிளந்து குடலைப்பிடுங்கிக் குட்டமிட்டுக் கிளம்புகிற ருதிரத்தை அளைந்த கையோடே "மறுவலிட்டு ஆஶ்ரிதரை இன்னம் நலியுமோ" என்று ஒரநுகூலனை ஸ்த்தாபிக்குந்தனையுமிருந்தானை யென்னுதல். சீறத்துக்கெதிர் நிற்கமாட்டாமல் ப்ரஹ்மேஶாநாதிகள் முதலானவானோர் நெஞ்சுகலங்கிச்சிதறியோடி மீண்டு நாத்தழும்பவேத்தும்படி அல்லிமாதர்புல்கலக்ஷ்மீநரஸிம்ஹமென்னும்படி சீற்றம் தணிந்திருந்தானை யென்னுதல். சீற்றம் தணிந்தாலும் உதிரமளைந்த கையோடேயிறே யிருப்பது. இவளும் வீரமஹிஷியாகையாலே (௧)"ஹதாந்த்ராஸம் விஷண்ணஜ-பர்தாரம்பரிஷஸ்வஜே" என்றாப்போலே வெருவினபூங்கோதையாள் விரோதிபோனபின்பு துணுக்குத் தவிர்ந்து ரத்த வெடியோடே புல்குமிறே. (உள்ளவாகண்டாருளர்) ராமனையுள்ளவாகண்டாருளர்; ராஜகுலத்திலே பிறந்த வாஸனையாலே ஆஶ்ரித விரோதிநிரஸநார்த்தமாக அடுத்த வேஷமெடுத்து நிரஸித்திருந்தானென்று உள்ள

துக்கு விரோதம் வாராதபடியாக நரஸிம்ஹ ரூபத்தைக்கொண்டு இருபிளவாக்கி. (உதிரமளைந்தகையோடிருந்தானை) பிளந்தவளவில்நில்லாதேஉதிரத்தையளையும்(௨)"வெஞ்சினத்தரி" என்கிறபடியே மிகுந்த சீற்றத்தாலே அவனுடைய சரீரமெங்கும் * குருதி குழம்பி யெழும்படி கூருகிராலே குடைந்து குடலைப்பிடுங்கி யெடுக்கையாலே, உதிரமளைந்த கையோடே சீற்றந்தோற்ற விருந்தவனை. (உள்ளவா கண்டாருளர்) ஸம்ஶயவிபர்யயரஹிதமாகஉள்ளபடி கண்டாருளர். உள்ளவாகாண்கையாவது- அவதாரப்ரயுக்த

யும், அத்தோடிருந்த படியையு மருளுகிறார் (பிளந்தவித்யாதி). "வெஞ்சினத்தரி" என்றவிடத்தில் "வெம்" என்றதினர்த்தம் (மிகுந்த) என்றது. "சீற்றம் தோற்றவிருந்தானை" என்றவிடத்தில்இவனிருந்தவிடமேஇராமனைக் காண்கைக்குத் தேடுகிற விடமென்றுகருத்து இங்ஙனன்றாகில் "இருக்குமிடம் நாடுதிரேல்" என்றதுக்குச்சேராதிறே. "உள்ளவா" என்றது-உள்ளவாறென்றாய்,அதுக்கர்த்தம் (உள்ளபடி)என்றது. அவதாராந்தரங்கள் பேதித்திருக்கையாலே உதிரமளைந்தானிருக்குமிடமே இராமனிருக்குமிடமாமோவென்ன, தர்ம்யைக்யத்தாலே, இது சேருமென்னுமத்தை உள்ளவாவென்றது ஸூசிப்பிக்கிறதென்கிறார் (உள்ளவாகாண்கையாவதித்யாதி). (௧)

(௧) ரா-ஆ-௩௦-௩௯. (௨)

வர்கண்டாருளர். இவளோடே கூடினலிறே வஸ்துவை உள்ள படி காணலாவது. இதுதானேயிறே தர்ம்யைக்யமும். (க)

அவ;— இரண்டாம்பாட்டு. (நாந்தகமித்யாதி) அவனை ஈஸ்வரனென்றறுதியிட்டால் ஸ்ரீபஞ்சாயுதங்களோடே காணவே ணுமென்கிறர்.

---

மானஆகாரங்களையிட்டு வேறுபடக்காணுதே, "ராமாவதாரமாய் ராவணவதம் பண்ணினவனும், ந்ருஸிஹ்மாவதாரமாய்ஹிரண்ய வதம் பண்ணினவனும் ஒருவனே" என்று வஸ்துவினுடையபடி யறிந்துகாண்கை.

முன்பு ஹிரண்யனானவன்றானேயிறே பின்பு ராவணனாய்ப் பிறந்தவன். ப்ரஹ்மாதிகள்பக்கல் ஹிரண்ய ராவணர்களிருவரும் கொண்டவரங்களுக்குவிரோதம் வராதபடி நிரஸிக்க வேண்டுகை யாலேயிறேரூபபேதம்கொள்ளவேண்டிற்று. அதாவது-"தேவாதிசதுர்வித ஜாதியிலொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்றுவரங் கொள்ளுகையாலே நரஸிஹ்மமாக வேண்டிற்று - அங்கு; "தேவர்கள் அஸுரர்கள் ராக்ஷஸர் முதலானரொருவராலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொள்ளுகையாலும், மநுஷ்யரை ஒன்றாக கணியாமல் போருகையாலும், மநுஷ்யனாய் நின்று கொல்ல வேண்டிற்று-இங்கு; ஆகையால்கார்யாநுகுணமாகக்கொண்ட ரூப பேதமாத்ரமேயாய், ப்ரகாரி ஒன்றேயாகையாலே இந்த ஐக்யமறிந்து காண்கையாயிற்று-உள்ளபடி காண்கையாவது. ... (க)

அவ;—இரண்டாம்பாட்டு. (நாந்தகமித்யாதி) கீழ்ப்பாட்டிலே ஈஸ்வரத்வம் தோற்றிற்றிறே; "ஈஸ்வரன்" என்றறுதியிட்டால் பின்னை ஸ்ரீ பஞ்சாயுத தரத்வம் சொல்லலாமிறே: ராவணவதத்தளவுமிறே ஈச்வரத்வந்தான் மறைக்கவேண்டுவது; ஆகை

---

அவ;—இரண்டாம்பாட்டு. (நாந்தகமித்யாதி) பெருமாள் த்விபுஜராய் மநுஷ்யராகவே அவதரித்திருக்க,பஞ்சாயுததரத்வம் சொல்லக்கூடுமோவென்னவளுகிறர்(கீழ்ப்பாட்டிலேயித்யாதி),கீழ்பாட்டிலே ஈஸ்வரத்வம்தோன்றினபடி யெங்ஙனேயென்ன (ராவணேத்யாதி வாக்யத்வயத்தாலே). இத்தால் கீழ்ப்பாட்டில் ராவணவதாநந்தர முண்டான திருவபிஷேகத்தைச் சொல்லுகையாலே ப்ரஹ்மா சொன்ன வீஸ்வரத்வம் தோற்றிற்றென்று கருத்து,

மூ.—நாந்தகஞ்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கந் திருச்சக்கரம்
ஏந்துபெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல்
காந்தள்முகிழ்விரற் சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க
வேந்தர்தலைவன்சனகராசன்றன் வேள்வியிற்கண்டாருளர்.

---

ஸ்வ.—(நாந்தகமித்யாதி) ஸ்ரீபஞ்சாயுதங்களையும் சொல்லும்போது இன்னதுமுதலாகவெண்ணவேணுமென்கிற நிர்பந்தமில்லை; எல்லாரும் ஏகமநாக்களாயிருக்கையாலே, ஒன்றைச்சொன்ன போதே எல்லாத்தையும் சொல்லிற்றாமிறே. "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்கையாலும், (க) "சார்ங்கம்வளைய-நாணுமவனு மறிதும்" (உ) "ஆழியொடும் பொன்னார்சார்ங்கம்" என்பது சேரச்சொல்லுவதாகையாலே "சார்ங்கபாணி" என்றபோதே எல்லாம் சொல்லலாமிறே. (ஏந்துபெருமையிராமனை) ஐந்தாலும்கொள்ளும் காரியம் ஒன்றுகொண்டேகொள்ளுமாகையாலே மற்றையவை யாலிறே, ராவணவதாநந்தரம் வந்த ப்ரஹ்மாதி தேவர்கள், (ங) "ஸவாந்நாராயணோ தேவ: ஸ்ரீமாந் சக்ராயுதோ விபு:- பவாந்நாராயணோ தேவஸ்ஸ்ரீமாந் சக்ராயுதோ விபு:" என்றது பின்னையும். (ச) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே - ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்று இவரருளிச்செய்தது - முன்பு நின்ற நிலையில் புரையறுதி தோற்றுகைக்காகவிறே.

வ்யா.—இரண்டாம்பாட்டு (நாந்தகம்) திருக்கையைப் பிரியாதே யிருந்து எதிரிகளை அறச்செய்யும் திருக்குற்றுடைவாள். (சங்கு) வாய்கரையிலே யிருந்து தன்னோசையாலே எதிரிகளை முழுக்காயாக அவியப்பண்ணும் ஸ்ரீ பாஞ்சஜந்யம். (தண்டு) கைவிடாமலிருந்து எதிரிகளை நெரிய அடிக்கும் ஸ்ரீகதை. (நாணொலிச்சார்ங்கம்) ஜ்யாகோஷஸஹிதமாய் எதிரிகள்மேலே ஶரவர்ஷத்தை வர்ஷிக்கும் ஸ்ரீசார்ங்கம், (திருச்சக்கரம்) * கருதுமிடம் பொருது கைவந்திருக்கும் திருவாழி. (ஏந்துபெருமையிராமனை) இவற்றை யழகுக்குடலாகவும் விரோதி நிரஸநத்துக்குடலாகவும் தரித்துக்கொண்டிருக்கும் பெருமையையுடையனாய், இவைமிகை

---

ஆகில் ப்ரஹ்மா வெளியிட்ட வநந்தரமும் "ஆத்மாநம் மாநுஷம்மந்யே" என்றதேதுக்காக வென்னவருளுகிறார் (பின்னையுமித்யாதி),

"ஏந்துபெருமை" என்று இவற்றை தரித்தத்தால் சொன்ன பெருமைக்குஆயுதங்களுக்குள்ளபெருமைகளையருளுகிறார் (திருக்கையையித்யாதி)

(க)நா-தி-டு-அ (உ)தி-மொ-கய-கO-சO. (ங)ரா-யு-கஉO-கங. (ச)ரா-யு-கஉO-கக.

யெல்லாம் அழகுக்கேற்றினவையிறே உள்ளது. அழகுதனக்கும் இவைமிகையாய், "ஸூஹாணஸ்யாஹாணழ்- ஆபரணஸ்யாபரணம்" (க)"வு-ுஸாரு-ஷிஹிதா z வஹாரிணுழ் - பும்ஸாம்த்ருஷ்டிசித்தாப ஹாரிணம்" என்னும்படியிறே அவன்பெருமைதானிருப்பது. (இராமனை) எல்லாரையும் எல்லாப்ரகாரத்தாலும் ரமிப்பிக்க வல்லவனை. (இருக்குமிடம் நாடுதிரேல்) இந்த ஸௌந்தர்யாதிகளும் ஸௌர்யாதிகளும் அவனிருக்குமிடத்திலே காணவேணுமென்று தேடுகிறிகோளாகில்.

(காந்தளித்யாதி) "செங்காந்தள் முகிழ்போலே திருவிரல்" என்கையாலே இவளுடைய திவ்யாவயவங்களுக்கெல்லா முபலக்ஷணமாய், பருவத்தைக்காட்டுகையாலே அவனை யழைத்தமைகாட்டுகிறது. "சிதை" என்கையாலே குடிப்பிறப்புக் காட்டுகிறது. "ஆகிச்சென்று கடுஞ்சிலையிறுத்து" என்கையாலே கொடுவந்த விஸ்வாமித்ரனை வ்யாஜமென்னலாமிறே. (வேந்தரித்யாதி) ராஜதர்மஸ்ரேஷ்டனுகையாலே ராஜாக்களுக்கெல்லாம் கர்தாவுமாய், வம்ஸவானுமாயிருக்கிற ஜநகராஜனுடைய யஜ்ஞஸமீபத்தி

---

யாம்படி தன்வடிவழகாலே யெல்லாரையும் ரமிப்பிக்கவல்லவனை. (இருச்குமிடம் நாடுதிரேல்) இந்த ஸௌர்யாதிகளும் ஸௌந்தர்யாதிகளும் அவனிருக்கு மிடத்தே சென்று காணவேணுமென்று இருக்குமிடம் தேடித்திரிகிறி கோளாகில்.

(காந்தளித்பாதி) செங்காந்தள் முகிழ்தழ் போலேயிருக்கிற திருவிரற்களையுடைய பிராட்டிக்காக. (கடுஞ்சிலைசென்றிருக்க) விஸ்வாமித்ரமஹர்ஷி கொடு செல்லச்சென்று. "ரௌத்ரமாய் ஒருவராலுமெடுக்கவும் வளைக்கவும் அரிது" என்றுகிடந்த வஸியவில்லைமுறிக்க. கடுமை-திண்மை. (வேந்தரித்யாதி)ராஜதர்மத்தோடே தத்வ

---

( ஸௌர்யாதிகளும் ஸௌந்தர்யாதிகளும் ) என்றத்தை த்விதியாந்தமாகக் கொள்வது.

"சென்று-கடுஞ்சிலையிறுக்க" என்றந்வயித்துச்சொல்லுகைக்கும்,கடுமைக்கும் ஹேதுவையருளிச்செய்து கொண்டர்த்தமருளுகிறுர் (விஸ்வாமித்ரேத்யாதி). "ஜநகராஜன் தன்" என்றவிடத்தில்தன்மையை "வேந்தர்தலைவன்" என்றதுவாகக்கருதியருளுகிறுர் (ராஜதர்மேத்யாதி). கீழ்ப்பாட்டிலே இரா

---

(க) ரா-அ-ரு-உக.

மூ.—கொலையானைக்கொம்புபறித்துக்கூடலர்சேனைபொருதழியச்
சிலையால்மராமர மெய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல்
தலையாற்குரக்கினந்தாங்கிச்சென்றுதடவரைகொண்டடைப்ப
அலையார்கடற்கரைவீற்றிருந்தானையங்குத்தைக்கண்டாருளர்

லே சென்றிருக்கக்கண்டாருளரென்னுதல். அன்றியே இவரா சைப்பட்டாப்போலே ஸாலக்ஷணமான சிலையை முறித்து, திருத்தமப்பனாரையும் திருத்தாயாரையுமழைத்து மற்றும் வேண்டுவாரையும் கூட்டிக்கொண்டு அந்தஸமீபத்திலே (க)"இயம்ஸீதா மமஸுதா ஸஹதர்மசரீதவ-இயம்ஸீதாமமஸுதாஸஹதர்மசரீதவ" என்று, "வடிவழகிது, குடிப்பிறப்பு இது, ஸஹதர்மசரியாக வங்கிகரியும்" என்று காட்டிக்கொடுத்துச் சடங்குகளும் தலைக்கட்டினபின்பு பெருமாளையும் நாய்ச்சியாரையும் சேரவைத்துத் தம்முடைய வாசையாலே ஒப்புப்பார்த்துக் "கண்ணழகுவிஞ்சல்" என்றிருக்கையாலேயிறே "வேள்வியில் கண்டாருளர்" என்கிறது. இதில் "இராமனை நாடுதிரேல்-வேள்வியில் கண்டாருளர்" என்கிறதில் வேறுபாடு தோன்றுதாப்போலேயிறே, "இராமனை நாடுதிரேல்'- 'உதிரமனைந்தகையோடிருந்தானைக்-கண்டாருளர்'' என்றதும். (உ)

அவ;—மூன்றும்பாட்டு, (கொலையானையித்யாதி) க்ருஷ்ணாவதாரத்தோடே ராமாவதாரத்தைச் சேர்த்தநுபவிக்கிறார்.

ஸ்வா;—(கொலையானையித்யாதி) கொலையில் கடிதான குவலயாபீடத்தை...

ஜ்ஞாநாநுஷ்டாநங்களை யுடையவனாகையாலே ராஜாக்களுக்கெல்லாம் தலைவனான ஸ்ரீஜநகராஜனுடைய யாகத்திலே கண்டாருளர். இங்கு, "இராமனைநாடுதிரேல்—வேள்வியில் கண்டாருளர்"என்கிறதில் வேறுபாடு தோன்றுதாப் போலேயிறே, "இராமனைநாடுதிரேல் - உதிரமனைந்தகையோடிருந்தானை - கண்டாருளர்'' என்கிறதும். .... ... .... ... .... (உ)

வ்யா.—மூன்றும்பாட்டு. (கொலையானை கொம்புபறித்து) (க) "கவளக்கடாக்களிறு" என்கிறபடியே துர்த்ரவ்யங்களைப் பரு

மனை நாடினவர்க்கு நரஸிம்ஹனைச் சொல்லுவானென்னென்கிற சங்கைக்கு இப்பாட்டில் ப்ரமேயம் நியாமகமென்கிறார் (இங்கிராமனையித்யாதி) ... (உ)

அரு,—மூன்றும்பாட்டு. (கொலையானை) கொலை-கொல்லுமதானவென்றும், இதுக்கு ஹேது பூர்வகமர்த்தமருளுகிறார் (கவளவித்யாதி). "கூடலர்

(க) ரா-பா-எரு-உகூ. (உ) தி-வாய்-ச-கூ-ரு.

யாபீடத்தின் கொம்பை அநாயாஸேநபிடுங்கி. (கூடலரித்யாதி) ராவணன் முதலான ராக்ஷஸஸேனை யெல்லாம் யுத்தத்திலே முடியும்படியாகத்திருவுள்ளத்திலே கோலிப்பிறே, மஹாராஜருடை யஸங்காநிவ்ருத்த்யர்த்தமாகச் சிலையால் மராமரமெய்தது. (தேவனே) இப்படிப்பட்டத்யோதமாநாதி குணவிசேஷங்களையுடையவனே. (சிக்கெனநாடுதிரேல்)"அதொருவ்யக்தி, இதொருவ்க்யதி," என்று பிரித்துப்ரதிபத்திபண்ணாதே"தர்மியொன்று"என்றத்யவஸித்துக்

---

குவித்துப் பிச்சேற்றி மதஜலமொழுகும்படி நிறுத்துகையாலே, ஆனைக்காணில் கொல்லுமதான குவலயாபீடமாகிற ஆனையினுடைய கொம்புகளை அநாயாஸேந பறித்து. (கூடலர்சேனைபொருதழிய) மஹர்ஷிகளைநலிகையாலே ஶத்ருக்களானஜநஸ்தாநவாஸிகளான ராக்ஷஸருடைய ஸேனையானது விசேஷம் சொல்லவும் ஒருவரில்லாதபடி அழியும்படியாகப் பொருது. (சிலையால் மராமரமெய்ததேவனே) (௧) "ஸுக்ரீவஸ்ஶங்கிதஶ்சாஸீந் நித்யம் வீர்யேண ராகவே" ஸுக்ரீவஸ்ஶங்கிதஸ்சாஸீந் நித்யம் வீர்யேணராகவே" என்கிறபடியே மஹாராஜருடைய அதிசங்கையைத் தீர்க்கைக்காகவில்லாலே மராமரங்களை மறுபாடுருவ எய்து, அவரதிசங்கையைத் தீர்த்தஹர்ஷத்தாலே திருமேனியிற்பிறந்தபுகரையுடையவனே. (சிக்கென நாடுதிரேல்) "அதொரு வ்யக்தி, இதொரு வ்யக்தி" என்று பிரித்து ப்ரதிபத்திபண்ணாதே, "தர்மியொன்று" என்றே அத்யவஸித்து அவனிருந்தவிடம் தேடுகிறீகோளாகில்.

---

சேனையழிய பொருது" என்றந்வயித்து ஹேது பூர்வகமர்த்த மருளுகிறுர் (மஹர்ஷிகளையித்யாதி.) கூடலர்-சத்ருக்கள். (விசேஷம் சொல்லவு மொருவரில்லாதபடி) என்றதுக்கு அகம்பநன் ராவணனோடே விசேஷம் சொல்லும்படி ஒருவனுண்டாயிருந்தானேயாகிலும் கராதிகளோடு வந்து யுத்தம்பண்ண வந்தவனல்லாமையாலே இப்படி சொல்லலாமென்று கருத்து. மராமரமெய்கைக்குஹேதுவையும், "தேவன்"என்றதுக்குகாந்திமானென்றுவிவக்ஷித்து அதுக்கு ஹேதுவையும் காட்டாநின்றுகொண்டு அர்த்த மருளுகிறுர் (ஸுக்ரீவ இத்யாதி). (மறுபாடுருவ) அப்புறத்திலே யுருவிப்போக.குவலயாபீடநிரஸநமும் மராமர மெய்ததும் ஏககர்த்ருகமாகச் சொன்னதைத் திருவுள்ளம்பற்றி சிக்கென வென்றதுக்குத்தாத்பர்யமருளுகிறுர் (அதொருவித்யாதி).

---

(௧) ரா-பா-௧-௬௩,

காணுமளவும்(க)"ஆவஊா நய - சாபமாநய' என்னுதே, அவனி ருந்த விடம் தேடுகிறிகோளாகில்,

(தலையாலித்யாதி) ஸ்ரீவாநரவீரர்கள் இடமுடைத்தான பர்வதங்களைப் பெருமாளெழுந்தருளும்போது இந்த மலையின்மேலே திருவடிகள் படும்படி மேலெழவைத்தடைப்பதாகத் தந்தாமுடைய உத்தமாங்கங்களாலே தரித்துக்கொண்டு வந்தடைப்ப. (அலையித்யாதி)"இத்தைநாம்காலாலே மிதிப்போமாகில்இவை,ஸாபோ.பஹதமான கற்களாய் ஸ்த்ரீரூபமாய் அடைபடாதபடி எழுந்திருக்குமாகில்,சுமந்துவந்தடைக்கிறவர்களுக்கஸஹ்யமாம்"என்று கரையிலே யிருந்தானென்னுதல். அடைக்கிறமுதலிகளுக்கு ப்ரியமாக மலைபொகடக்கிளம்பின வலைநீர் தெறிக்கும்படி ஆஸந்நமாக அரிகுலம்பணி கொண்டிருந்தானென்னுதல். இப்படி குரங்குகள் மலையைதூக்காநிற்க அவற்றைப்பார்த்து"என்தான்முதலிகளுக்கு, இத்தனை மெத்தன, என்தான் பெருமாளுக்குப் பகல முது அக்கரையிலே யாயிருக்கும்; நீங்கள் இத்தைக்கல்லும் கறடுமாக்கி அத்யந்தம்ருதுவான ஸ்ரீபாதங்களுறுத்தும்படிபண்ணுதே வாங்கி நில்லுங்கோள் நாங்கள் குளித்துப்புரண்டு உடம்பில்தொங்கின நொய்மணல் கொண்டு உங்களுக்கும் பெருமாளுக்கும் வழியாக்கித் தரு

---

(தலையாலித்யாதி) ஸ்ரீவாநரவீரர்களுடைய திரள்களானவை "பெருமாள் திருவடிகள் படப்புகுகிறதன்றோ" என்னும் கௌரவ புத்தியாலே ஸிரஸாவஹித்துக்கொண்டு சென்று பெரியமலைகளைக் கொண்டுகடலையூடறுத்து அணையாகவடைக்க. (அலையித்யாதி)அலைமிக்கிருந்துள்ள கடற்கரையிலே அவ்வலை நீர் தெறிக்கும்படி ஆஸந்நமாக அவர்கள் செய்கிற அடிமையைப்பார்த்து உகந்துகொண்டு

---

"குரக்கினம் தலையால் தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப"என்றந்வயித்துத் தலை தாங்குகைக்கு ஹேதுவையருளிச் செய்துகொண்டு ஸப்தார்த்தமருளுகிறார் (ஸ்ரீவாநரேத்யாதி). (கடலை) என்றதுக்கு மேற்சொல்லுகிற கடல்பதத்தை இங்கும் கூட்டிக்கொள்வதென்று கருத்து.(ஊடறுத்து) என்றது இம்மலைக்கும் அம்மலைக்குமிடை வெளியில்லாமலென்றபடி. "அலையார்" என்றதுக்குப் பலிதத்தையும் வீற்றிருக்கைக்கு ஹேதுவையும் காட்டிக்கொண்டர்த்தமருளுகிறார் (அலைமிக்கித்யாதி). ... ... (ங)

---

(க) ரா-யு-உக-உஉ.

மூ;—தோயம்பரந்தநடுவுசூழலிற்றொல்லைவடிவுகொண்ட
மாயக்குழவியதனைநாடுறில் வம்மின்சுவடுரைக்கேன்
ஆயர்மடமகள்பின்னைக்காகியடல்விடையேழினையும்
வீயப்பொருதுவியர்த்துநின்றானைமெய்ம்மையேகண்டாருளர்

கிறோம்'' என்றவணில்களின் அத்யவஸாயத்தில் சலியாமையைக்கண்டு அத்யந்தம் ப்ரீதராய் இவ்வாஸ்சர்யத்தைக் கண்டு வேறுபாடு தோன்றவிருந்தானையென்னுதல். (அங்குத்தைக்கண்டாருளர்)அங்குத்தைவ்யாமோஹத்தோடேகண்டாருளரென்னுதல்; "கொலையானைகொம்புபறித்துஅங்குத்தைக்கண்டாருளர்'' என்றுதல்; "சிலையால்மராமரமெய்தவிடத்தில்கண்டாருளர்'' என்றுவிபக்தியைமாறுடிச் சொல்லுதல், கூடலர் சேனைபொருதழியசங்காரிவ்ருத்திபிறப்பித்து அங்குத்தை மராமரம் சிலையாலெய்த தேவனைச்சிக்கனநாடுதிரேல்'' என்றும் "அங்குத்தைக்கொலையானை அங்குத்தைக்கூடலர் சேனை'' யென்றுமாம். .... .... ... ... (௩)

அவ;—நாலாம்பாட்டு. (தோயமித்யாதி) நப்பின்னைப்பிராட்டி விஷயமாகச் செய்தவ்யாபாரங்களை அநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(தோயமித்யாதி)பரந்தஸமுத்ரமத்யே ஓரிடத்திலே பரந்ததோயநடுவு சூழலில். (தொல்லைவடிவுகொண்ட) பழைய

அவர்களை அடிமைகொள்ளுகையால் வந்த வ்யாவ்ருத்தி தோற்ற வெழுந்தருளியிருந்தவனை அந்த ஸ்தலத்திலே கண்டவர்களுளர்.

வ்யா;—நாலாம்பாட்டு. (தோயம்பரந்த நடுவுசூழலில்) நடுவுசூழலில் தோயம்பரந்தபோது. அதாவது - சுற்றும் ஸமுத்ரமாய், அதுக்குநடுவே வர்த்துலாகாரமாயிருக்கிற பூமியெங்கும் ஜலத்தாலே வ்யாப்தமானகாலத்திலே யென்கை. "பரந்த'' என்கிறதுக்குமேலே, "போது'' என்கிறவித்தனையும் அத்யாஹார்யம். அன்றிக்கே, தோயம்பரந்தநடுவு - ஜலம்பரந்தநடுவே; அதாவது -

அரு;—நாலாம்பாட்டு. (தோயமித்யாதி) எடுத்த ப்ரதீகத்துக்கு அந்வய பூர்வகமாக ஶப்தார்த்தம் காட்டுகிறார் (நடுவித்யாதிவாக்யத்வயத்தாலே). ப்ரதீகத்திலில்லாததான 'போது' என்றபதத்தை அந்வயித்தபடி யெங்ஙனே யென்னவருளுகிறார் (பரந்தவித்யாதி). "நடுவு'' "என்றதை ஸப்தமியாக்க வேண்டியருளுகிறார் (ஜலமித்யாதி), உக்தார்த்தத்தை அந்வயமுகேந விவரிக்கிறார் (அதாவதித்யாதி). "சூழலில்'' என்றதை சூழலாலேயென்று த்ரு

வடிவைக்கொண்ட. (மாயக்குழவியதனை நாடுறில்) தொல்லை-பெருமையாகவுமாம். புதுமையில் பெருமையுண்டானாலும் சிறுமையாயிறே தோற்றுவது; பழைமையென்றபோது ஆத்யநாதி யென்னாமல் அநாதியைக் காட்டுகையாலே. * ஆதியஞ்சோதியுருவை யங்கு வைத்திங்குப்பிறந்த வடதளஸாயி யென்னுதல். க்ருஷ்ணனென்னுதல். பரந்த தோயநடுவு சூழலாவது - நடுவு-ஜம்பூத்வீபம், சூழல்-ஒன்பதாங்கூறுதல், இதில் வடமதுரையாதல். இதில் சிறைக்கூடமாதல். இதிலேயிறே கையும் திருவாழியும் தோன்ற அங்குப்போலே ஒப்பனை குன்றாமல் வந்தவதரித்தது.

(மாயம்) க்ருத்ரிமாஶ்சர்யம். அந்தமாயர்தான் சிறைக்கூடத்திினின்றும் போந்தமாயமும், திருவாய்ப்பாடியில் பிறந்துவளர்ந்த மாயமுமெல்லாம் தோன்றுகையாலே மாயக்குழவியென்கிறது. தொல்லை-பெருமையாய், வடதளஸாயியைக்காட்டினபோது, சிறு

பரந்த ஜலத்தினுடைய மத்யத்திலேயென்றபடி. (சூழலில்தொல்லைவடிவுகொண்ட) ரக்ஷ்யவர்க்கம் ப்ரளயத்திலே யழியாதபடி ரக்ஷிக்கைக்கீடான விரகாலே, பழையதான அப்ராக்ருத விக்ரஹத்தை சுரிக்கிக்கொண்ட. மேல், "குழவி" என்கையாலே "வடிவை சுருக்கிக்கொண்ட" என்று நியமித்துச் சொல்லவேணும்.

(மாயமித்யாதி) சிறுவடிவைக்கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலேவைத்து ஒருபவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநாஸாமர்த்யத்தால்வந்த ஆஶ்சர்யத்தயுடைய அந்தக்குழவியை. (க) "[illegible] । [illegible]

தியையாக்கி விரகாலே யென்றர்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (ரக்ஷ்யவர்க்கமித்யாதி). "கொண்ட"என்றது - சுருக்கிக்கொண்டவென்று காட்டுமோவென்ன, நியாமகம் காட்டுகிறார் (மேலித்யாதி).

மாய-ஆஶ்சர்யத்தையுயுடைய, அதனை-அந்தக்குழவியை, பிள்ளையை யென்று ஸப்தார்த்தம் விவக்ஷித்து ஆஶ்சர்யத்தையுபபாதித்துக் கொண்டர்த்தமருளுகிறார் (சிறுவடிவையித்யாதி). (சிறுவடிவைக் கொண்டு பெரியலோகங்களைத்திருவயிற்றிலேவைத்து) இத்யாதிக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (முக்த்த இத்யாதி). "அதனை"என்று அசேதந வாசி

(க) அதிமாநுஷஸ்தவெ கச.

மையளவிட வொண்ணாத பெருமையாய் மாறித்தோற்றுகிற தென்னவுமாம். (அதனை) குழவி யென்கையாலே அதனை யென்கிறது. (நாடுதில்) தேடுகையிலே அத்யவஸிக்கில். (வம்மின்) வாருங்கோள். (சுவடுரைக்கேன்) அடியும்சுவடுமெளிதாகச் சொல்லுகிறேன். திருவாப்பாடியில் பெண்கள் திருக்குழலூத்தில் யமுனைக்கரையில் இவர்களைமலக்கம் காண அவனொளித்தபோதுஒருவரையொருவர்வினவுவது, ஒருவர்க்கொருவர் அவனடியும்சுவடும் காட்டுவது,வார்மணற்குன்றிலே அவன்வரவுபார்த்துநிற்பதானார்களிறே. ருஷிகளும் (க) தாஸாஶாவிரஸூதஃ - தாஸா மாவிரபூத்" என்று பெண்களைப்போலேகாணுமளவும் "கல்யாணகுணங்களுக்கு ஆஶ்ரயமேதோ" என்று தேடுவாரும் தாம்தாமறிந்தவளவுகளைச் சொல்லுவாருமாயிறே இருப்பது. ஆனாலும் தாந்தாம் அநுகரித்தார்களில்லையிறே,

---

வ்யா० க்வ்யாஜத꞉ப்ரஶயஸெகிமிஹாவதீர்ண꞉ - முக்தஶ்ஶிஶுர்வடதளேசயிதோவிதந்வா தந்வா ஜகந்திபிப்ருஷேஸவிகாஸ மேவ - ஐஶ்ரீமிமாந்தவதுஶக்திமதர்கிதவ்யாமவ்யாஜதஃ ப்ரதயஸேகிமிஹாவதீர்ண꞉," - என்றாரிறே - ஆழ்வான். "குழவி" என்கிறதுக்கீடாக - "அதனை" என்கிறது. அவனைஎன்றபடி. (நாடுரில்) தேடுகையிலே அத்யவஸிக்கில். (வம்மின் சுவடுரைக்கேன்) வாருங்கோள் உங்களுக்கு ஒரடையாளம் சொல்லுகிறேன். சுவடாவது - அகடிதகடநாஸாமர்த்ய ஸூசகமானதொரு வ்யாபாரம். அதாவது - அஸுராவிஷ்டமான ருஷபங்களேழையும் ஒருகாலே ஊட்டியாக நெரித்துப்போகட்டதிறே.

---

சப்ததத்தைச் சொல்லுகைக்கு நியாமகமேதென்ன (குழவியித்யாதி). குழந்தை சொல்லிற்று என்னக்கடவதிறே. மேலே "வியர்த்து நின்றானை" என்றுசேதநவாசி சப்தத்தாலே சொல்லுகைக்கநுகுணமாக "அதனை" யென்றத்தை நிர்வஹிக்கிறார் (அவனையென்றபடி) என்று. வடதளஶாயிக்கும் க்ருஷ்ணனுக்கும் விஶேஷண வடையாளமேதென்ன வருளுகிறார் (சுவடாவதித்யாதி). ஸாமாந்யமாகச் சொன்னதை விசேஷித்து விவரிக்கிறார் (அதாவதித்

---

(க) பாக-௧௦-௬௨-௨௩

(ஆயரித்யாதி) ஸ்ரீகும்பர்மகளாய் மடப்பத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டிக்காக கொலைபுரிந்து அஸுரமயமான ருஷபங்களேழையும் முடியும்படி பொருதவாயாஸத்தாலே ஸ்வேத ஜலம் தோன்ற நின்றவனை. அதிறே அவதாரத்தில் மெய்ப்பாடு. (மெய்ம்மையைக்கண்டாருளர்) அவளோடே கூடினபின்பிறே வஸ்துவுக்கு ஸத்யத்வமுள்ளது. ஸ்ரிய꞉ பதித்வம் நிரூபகமானாப்போலேயிறே இவளை நிரூபகமாகச் சொல்லுகிறதும். (௧) "பின்னை மணாளனை". ... ... ... (௪)

அவ;—அஞ்சாம்பாட்டு. (நீரித்யாதி) ருக்மிணிப்பிராட்டி விஷயீகாரத்தை யநுஸந்திக்கிறார்.

---

(ஆயர்மடமகள் பின்னைக்காகி) கோபரான ஸ்ரீகும்பருடைய பெண்பிள்ளையாய், ஆத்மகுணமான மடப்பத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டியை லபிக்கைக்காக, (அடல்விடையேழினையும்) அஸுராவிஷ்டமாய் யுத்தோந்முகமாய் நின்ற ருஷபங்களேழையும். (வீயப்பொருது வியர்த்து நின்றானை) முடியும்படியாகப்பொருது, அந்த ஆயாஸத்தாலே குறுவியர்ப்பரும்பின வடிவும் தானுமாய் நின்றவனை. (மெய்ம்மையேகண்டாருளர்) உண்மையாகவே அவ்விடத்திலே கண்டவர்களுண்டு. இத்தால் - வடதளஶயநாபதாநத்துக்கும் க்ருஷ்ணாவதாரத்துக்கு முண்டான தர்மைக்யம் சொல்லப்பட்டதாய்த்து. (௨) "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுள்" என்றும், (௩) "ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்" என்றும் இவ்வைக்யந்தான் கீழும் பலவிடங்களிலும் சொல்லப்பட்டதிறே. .... .... .... ... .... (௪)

---

யாதி). (ஊட்டியாக நெரித்து)-கழுத்தை-மென்னையெல்லாமொரு பிடியாக நெரித்தென்றபடி. (ஊட்டி) கழுத்து.

"ஆயர்" என்றது-பூஜாயாம்பஹு வசநமாய், அவருடைய மகளென்று சப்தார்த்தம் விவக்ஷித்தர்த்தமருளுகிறார்(கோபரானவித்யாதி)."அடல்" என்றதினர்த்தம் (யுத்தோந்முகமாய் நின்ற) என்றது, உண்மையை விவரிக்கிறார் (இத்தாலித்யாதி). அபதாநத்துக்கும் என்ற ச(உ)காரம் அநுக்த ஸமுச்சயமாய், க்ருஷ்ணாபதாநத்தைச் சொல்லுகிறது. (க்ருஷ்ணாவதாரத்துக்கும்)என்றவிடத்தில் சகாரம் வடதளசாயியைச் சொல்லுகிறது. இந்த வபதாநைக்யத்தையும் அவதாரைக்யத்தையுமடைவேப்ரமாணமுகேந விவரிக்கிறார் (வையமேழுமித்யாதி). ... ... ... ... (௪)

(௧) ௨-ஞ-௧. (௨) ௧-௧-௬. (௩) -௧-௪-௭.

மூ;—நீரேறுசெஞ்சடைநீலகண்டனுநான்முகனும்முறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்றதிருமாலைநாடுதிரேல்
வாரேறுகொங்கையுருப்பிணியைவலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றிச்சேனைநடுவுபோர்செய்யச்சிக்கெனக்கண்டாருளர்.

ஸ்வா;-(நீரித்யாதி)"கங்காதரன், நீலகண்டன்" என்னும்ப்ரஸித்தியையுடையவன், (க) "சலங்கலந்தசெஞ்சடைக்கறுத்தகண்டன்" என்னக்கடவதிறே. ப்ரஹ்மபாவனை தலையெடுத்துப்ரஹ்மாதீர்த்தங் கொண்டு ப்ரஸாதிக்கிறபோது கர்மபாவனை கழியாமையாலேஅநாதரம் தோன்றத்தலையிலே தெளிக்கையாலே "நீரேறுசெஞ்சடை" என்கிறது. (உ)"சென்னிமேலேறக்கழுவினான்" என்னக்கடவதிறே ஹ்ருதயத்திலேகருடத்யாநமும் தலையிலே அம்ருதகலையுமாகையா

வ்யா;—ஐந்தாம்பாட்டு. (நீரேறுசெஞ்சடை நீலகண்டனும்) (௩)"तदम्बु पतितं दृष्ट्वा दधार शिरसा हरः। पावनार्थं जटामध्ये योग्योऽस्मीत्यवधारणात् - ததம்புபதிதம் த்ருஷ்ட்வா ததார சிரஸா ஹரஃ-பாவநார்த்தம் ஜடாமத்யேயோக்யோஸ்மீத்யவதாரணாத்" என்கிறபடியே-திருவுலகளந்தருளுகிறபோது,ப்ரஹ்மாதிருவடிவிளக்கினஜலம்விழுகிறதைக்கண்டு, பாவநார்த்தமாகஅத்தை ஶிரஸ்ஸாலே தரிக்கையாலே அந்தஜலத்தோடே கூடியிருப்பதாய், சிரகாலம்தபஃபாரணைப்பேணுதலற்றிருக்கையாலே சிவந்திருக்கிற ஜடையையுடையனாய்; (ச)"नारायणाज्ञया देवो नीलकण्ठत्वमाप्नुयात् -நாராயணாஜ்ஞயாதேவ நீலகண்டத்வமாப்நுயாத்" என்கிறபடியே ஸமுத்ரமதநஸமயத்தில் முந்துறக்கிளம்பின தீவ்ரமானவிஷத்தை "நீஇத்தைக்ரஸி" என்றுஸர்வேஶ்வரன் நியமிக்கக்ரஸிக்கையாலும், அதுதான் ஹ்ருதயத்திலே கருடத்யாநமும்

அரு;—அஞ்சாம்பாட்டு. (நீரேறித்யாதி) "முறையால்"என்று சேஷத்வ ஸம்பந்தம் தோன்றுகையால, அதுக்கு இவ்விசேஷணங்கள் ஹேதுக்களென்று திருவுள்ளம்பற்றி, நீரேறுகைக்கும் ஜடையில் சிவப்புக்கும் கண்டம் கறுத்திருக்கைக்கும் ப்ரமாணமுகேந தாத்பர்யங்களை யருளுகிறார் (ததம்பு யென்று தொடங்கி ருத்ரனு மென்னு மளவும்). (கருடத்யாநமும்) என்ற விடத்தில் "[illegible]

(க) தி-ச-வி-கக௩. (உ) ச-திருவ-கூ. (௩) (ச)

லேவிஷம் போக்கற்றுக்கட்டியாயிற்றிறே. (நான்முகனித்யாதி)அயன் நான்குநாவினாலும்தழும்பெழ கல்யாண குணங்கள்முறைமை தோன்றமிகும்படி ஸ்தோத்ரம்செய்ய. (நின்றதிருமாலை) முறைமைப்ரஹ்மபாவனையாலேதீர்த்தம் ப்ரஸாதப்படுகையாலும் பரிரஸ்ஸால் வஹித்த தீர்த்தபலத்தாலும் இவர்கள் நெஞ்சிலே தாஸோஹத்வமும் க்ருஹீதாம்ஸமானகல்யாணகுணங்களும் மிக்குத் தோற்றுமிறே. (நின்ற). (க"நின்றுகேட்டருளாய்"என்னப்போகிறார்களன்றே. தந்தாம்ப்ரயோஜநத்துக்காக விறே ஸ்தோத்ரம் செய்வதும். (திருமாலை) பூர்வவாக்யத்தில் ப்ரதமபதத்தில் நித்யயோகத்தால் வந்த ஶ்ரியః பதித்வத்தைப்ரதீதி மாத்ரமாக எல்லார்க்கும் சொல்லலாமிறே. (நாடுதிரேல்) உந்தாம் ப்ரயோஜநத்துக்காகத்தேடுகிறீர்களாகில்.

(வாரேறித்யாதி). கச்சுக்குள்ளே வளருகிற முலைகளையுடை

சிரஸ்ஸிலே சந்த்ரகலையுமாகையாலே கண்டத்தளவிலே நின்றுவிடுகையாலும், கருத்திருந்துள்ளகண்டத்தை யுடையனான ருத்ரனும் (நான்முகனும்) ஸ்தோத்ரம்பண்ணுகைக்கீடான பல முகத்தையுடைய ப்ரஹ்மாவும். (முறையால் சீரேறுவாசகம் செய்ய நின்ற) ப்ரஹ்மபாவனை தலையெடுத்து, தான் சேஷியும் தாங்கள் சேஷபூதருமான முறையால், தன்னுடைய குணங்களால் ப்ரசுரமான வசநங்களைக்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணும்படி நின்ற. (திருமாலை நாடுதிரேல்) தத்ததபீஷ்டபலப்ரதனான ஶ்ரியःபதியை, அவனும் அவளுமானசேர்த்தியோடே காணவேணுமென்று தேடுகிறீர்களாகில்.

(வாரேறுகொங்கை யுருப்பிணியை) "க்ருஷ்ணனுக்குபோக்ய

நாராயணம் தேவம் ஹ்ருதயே ... ஜ்ஞ । தக்ஷம் ஸாஹஸ்ர ... யஜ்ஞ - தம்த்ருஷ்ட்வா கோரஸங்காசம் ப்ராதுர்பூதம் மஹாவிஷம்। த்யாத்வாநாராயணம் தேவம்ஹ்ருதயே கருடத்வஜம் । தத்விஷம்ஸுமஹாகோரம்பபௌஸர்வ பயங்கரம்" என்கிற பாத்ம வசநங்களநுஸந்தேயங்கள். (ப்ரஹ்மபாவனை) பகவத்பக்தி. (தான்) என்றது - திருமாலை. "சீரேறு" என்றதினர்ததம் (தன்னுடைய குணங்களால் ப்ரசுர மான) என்றது.

"வாரேறு கொங்கை" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (க்ருஷ்ணனுக்கித்யாதி). ருக்மிணிப்பிராட்டி ஆளனுப்பிவரச் சொல்லியிரு

(க) திருவி-க.

யளாயிருக்கிற ருக்மராஜன் மகளை ஶிசுபாலனுக்கென்று வாக்தத்த மநோதத்தங்களாலே அறுதியிட்டு க்ரியாபர்யந்தமாக்குவதற்கு முன்னே இவள்ப்ரார்த்தனைக்கிடாக ஸங்கத்வநியும் காட்டி ப்ராணப்ரதிஷ்டையும்செய்து, கண்ணாலங்கோடித்திருந்த ராஜாக்கள் நடுவே கன்னி தன்னைப் பொருந்தாமையோடே கைப்பிடிப்பான் திண்ணார்ந்திருந்தவன் அண்ணாந்திருக்க இவளுடைய மனப்பொருத்தமே பற்றாசாக வலிமையாலே பிடித்துத் தேரிலேற்றிக்கொண்டு போய் "ஶிஶுபாலாய விஶிஷ்டாய-ஶிஶுபாலவிசிஷ்டாய" என்று ஒரு ப்ராமாணிகராலும் சலிப்பிக்க வொண்ணாதபடி பாணிக்ரஹணம் செய்யவும் கண்டாருளர். (ரு)

மானவிவை பிறர்கண்படவொண்ணாது" என்று. (க) "செங்கச்சுக்கொண்டு கண்ணாடையார்த்து" என்கிறபடியே கச்சாலே மறைத்துக்கொண்டிருக்கிற திருமுலைத்தடங்களையுடைய ருக்மிணிப்பிராட்டியை. (வலியப்பிடித்துக்கொண்டுதேரேற்றி) பந்துக்களையுமுடன்படுத்தி * கண்ணாலமும் கோடித்துக் கைப்பிடிப்பதாகத் திண்ணார்ந்திருந்த சிசுபாலன் லஜ்ஜாவிஷ்டனாய் அண்ணாந்திருக்கும்படியாக ஆறுடிவருகிற ஸமயத்திலே சென்று, அவளுக்கும் தனக்குமுண்டான மனப்பொருத்தமே ஹேதுவாக, பந்துக்களுடன் படவன்றிக்கே பலத்திலே பிடித்துக்கொண்டு தேரிலேயேற்றி. (சேனைநடுவு போர்செய்ய) ருக்மிணிப்பிராட்டி தமையனான ருக்மன் இந்தப்பரிபவம் பொறாமையாலே அநேக ராஜாக்களும் தானும் பஹுஸேனையோடே வந்து போகாதபடி வழிகட்டிச் சூழ்ந்துகொள்ள, அந்த ஸேனைக்குநடுவே நின்று அவர்களோடே யுத்தம்பண்ண. (சிக்கெனக்கண்டாருளர்) அந்தமணக்கோலத்தையும்வீரக்கோலத்தையும் த்ருடமாகக் கண்டவர்களுளர். .... ... .... (ரு)

க்க, "வலியப்பிடித்து" என்னக்கூடுமோ வென்னவருளுகிறார் (பந்துக்களையுமித்யாதி). (திண்ணார்ந்திருந்த) நிஶ்சிந்தனாயிருந்த, (அண்ணாந்து) ஆகாசத்தைப்பார்த்து, (ஆராடி) என்றது-உத்ஸவ ஸமாப்திக்குறுப்பானவுபாயாநுஷ்டானம்பண்ணியென்றபடி (உ) "க்ருத்வா வாஹாவாஹநாராஜா பௌத்ரா வாப்ரயஞ்சராஷயந் - கந்யாசாந்த:புராத் ப்ராகாரத்வ்டைர் குப்தாம்பிகாலயம்" என்று ஶ்ரீபாகவதத்தில் சொல்லியிருக்கையாலே இங்ஙனே கொள்ளவேணும். தேரேற்றின வநந்தரம் யுத்தம்பண்ணுகைக்கு ப்ரஸக்தியருளிச்செய்துகொண்டர்த்தமருளுகிறார் (ருக்மிணியித்யாதி). ... ... ... (ரு)

(க) நா-தி-கஉ-ச. (உ) பாக-கC-

மூ.—

பொல்லாவடிவுடைப்பேய்ச்சி துஞ்சப்புணர்முலைவாய்மடுக்க
வல்லானை மாமணிவண்ணனை மருவுமிடம் நாடுதிரேல்
பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை
எல்லாருஞ்சூழச் சிங்காசனத்தே யிருந்தானைக் கண்டாருளர். (சு)

---

அவ;—ஆறும்பாட்டு. (பொல்லாவித்யாதி). இவ்வளவேயோ. இவன் ப்ரீதிக்கு விஷயமானார் அனைவரும் சூழவிருந்த ப்ரகாரத்தை அநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(பொல்லாவித்யாதி). பேயென்றபோதே பொல்லா வடிவுமறியாமையும் தோற்றுமிறே. ஆயிருக்க "பொல்லாவடிவு" என்றது - தஜ்ஜாதிகளில் பொல்லாவடிவுடைய பேய்களும் அவற்றிலறியாதவையும் †நீக்கும்படியிறேஇவளுடையவடிவுமறியாமையுமிருப்பது. * வரண்டு நார்நரம்பெழக்கரிந்த வடிவும் வஞ்சமேவிய நெஞ்சிலறியாமையுமிறே இவளுக்கு ஸ்வாபாவிகம். அக்காலமெல்லாம் ஸூகமேப்ராணனோடே திரிந்தாளிறே. நல்வடிவெடுத்து ப்ரச்சந்நையாய்ப்பெற்றதாய்போலே வந்து தன் விசாரத்தாலேநஞ்

---

வ்யா;—ஆறும்பாட்டு. (பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்ச) வரண்டுவளர்ந்து நரம்பும் எலும்புந்தோன்றும்படியிருக்கையாலே பொல்லாதான வடிவையுடைய பேய்ச்சியானவள்முடியும்படியாக (புணர்முலைவாய்மடுக்கவல்லானை) அந்தவடிவைமறைத்து (க)"பெற்றதாய் போல்வந்த பேய்ச்சி" என்கிறபடியே யசோதைப்பிராட்டியோடொத்த வடிவைக்கொண்டு வருகையாலே தன்னில்தான் சேர்ந்திருந்துள்ள முலையிலே, அவள் முலைகொடாவிடில் தரியாதாளாய்க்கொண்டு "முலைப்பாலுண்" என்று கொடுத்தாப்போலே,

---

அரு,—ஆறும்பாட்டு. (பொல்லாவித்யாதி) பொல்லாவென்று துர்தர்சமான வென்று விவக்ஷித்து ஹேதுபூர்வகமர்த்தமருளுகிறார் (வரண்டித்யாதி). "புணர்" என்றதுக்குதன்னில்தான்பொருந்தியிருந்துள்ளவென்றர்த்தம் விவக்ஷித்து வரண்டு வளர்ந்து நரம்பு மெலும்புமான பேய்ச்சிக்கு முலையிப்படி சேர்ந்திருக்கக்கூடுமோ வென்ன வருளுகிறார் (அந்தவடிவையித்யாதி) முலையுண்ண வல்லானை யென்னுதே "வாய்மடுக்க"என்றதுக்குத் தாத்பர்ய

---

(க) தி-மொ-க-ங-க. † (பா) நியமிக்கும்.

சேற்றிக்கொடுத்த முலையில் வாசியறிந்து வாய்மடுக்க வல்லானை. புணர் - விசாரம். பெரியவபிநிவேசத்தோடே வாசியறிந்து வாய் மடுக்கவல்லானை; தன் பிள்ளைத்தனத்தில் தூய்மையறிந்து அறி யாமை தோன்றவாய் மடுக்கவல்லானை.

(மாமணிவண்ணனை) ப்ரச்சந்நவிரோதிபோகப் பெற்றவாறே மஹார்க்கமான நீலரத்நம் போலே திருமேனிபுகர்த்துத் தோன் றினபடி. (க) "உண்ணா நஞ்சுண்டுகந்தாயை" என்று அங்யபே ஷத்வமறப்பெறில்நஞ்சாகில்என்செய்யவேணுமென்று (உ)பேய்முலை நஞ்சூணாகவுண்டான்" என்கையாலே உண்டார் மேனிகண்டார்க் குப்புகர்த்துத் தோன்றுமிறே. (மருவுமிடம் நாடுதிரேல்) பேய்ச் சியைப்போலன்றிக்கே நீங்களும் அவனும் உஜ்ஜீவித்து உகக்கும் படி கூடுமிடம் தேடுதிரேல். (பல்லாயிரமித்யாதி) நரகாஸுர

தானும் முலையுண்ணுவிடில் தரியாதானாய்க்கொண்டு பெரிய அபிநி வேசத்தோடே வாயைமடுத்து உண்ணவல்லவனை. (௩) "உள்ளத் தினுள்ளே அவளையுறநோக்கி" என்கிறபடியே வருகிறபோதே அ வள் க்ருத்ரிமமெல்லாம் திருவுள்ளத்திலே ஊன்றதர்ஸித்திருக்கச் செய்தே, அவள் தாயாகவேயிருந்து முலைகொடுத்தாப்போலே, தானும் பிள்ளையாகவேயிருந்து முலையுண்டு அவளை முடித்த ஸாமர் த்யத்தைச் சொல்லுகிறது - வல்லானையென்று.

(மாமணிவண்ணனை) (௪) "விடப்பாலமுதாயமுதுசெய்திட்ட" என்கிறபடியே அவளுடைய விஷப்பாலை அம்ருதமாகவமுதுசெய்து அவளை முடித்து, ஜகத்துக்கு சேஷியான தன்னை நோக்கிக்கொடுக் கையாலே, நீலரத்நம்போலே உஜ்வலமான திருமேனியை யுடைய னாயிருந்தவனை. (மருவுமிடம் நாடுதிரேல்) திருவுள்ளம் பொருந் திவர்த்திக்கிறஸ்த்தலம் தேடுகிறீர்களாகில். (பல்லாயிரம் பெ ருந்தேவிமாரொடு) நரகவதாநந்தரம் கொண்டுவந்து பாணிக்ரஹ

மருளுகிறார் (அவள் முலையித்யாதி). (இருந்துள்ள முலையிலே) என்றதுக்கு (வாயைமடுத்து) என்றத்தோடன்வயம். மடுத்தானை யென்னுதே "மடுக்கவல் லானை" என்றதுக்குக் கருத்தருளுகிறார் (உள்ளத்தித்யாதி).

பேய்ச்சி முலையுண்கையைச் சொன்ன வநந்தரம் "மாமணி வண்ணனை" என்றதுக்கு ஹேதுவையும், மாவென்று-கருமையாய், அத்தால் நீலரத்ந மென்று ஸப்தார்த்தத்தையும் காட்டுகிறார் (விடப்பாலித்யாதி) "எல்லாரும்"

(க) தி-மொ-அ-௧௦-௪. (உ) க-திருவ-௧௧.
(௩) க-௧௦-௬. (௪) தி-வாய்-க-டு.௬.

மூ.—

வெள்ளைவிளிசங்கு வெஞ்சுடர்திருச்சக்கர மேந்துகையன்
உள்ளவிடம் வினவிலுமக்கிறைவம்மின் சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக்கண்டாருளர். (எ)

வதவ்யாஜத்தால் வந்த பதினாறாயிரம் பெருந்தேவிமாரென்கிறது. (பௌவமெறிதுவரை)ஸ்ரமஹாமாம்படி ஸமுத்ரமான துதிரைக்கையாலேஸேவிக்கிற ஸ்ரீமத்த்வாரகையிலேதேவிமாரெல்லாருஞ்சூழச் சிங்காசனத்தேயிருந்தானை, ஏகாஸநபரிச்சேத்யனாயிருந்து எல்லாரையும் ஏகாஸநத்தேயிருந்தாரைப்போலே உகப்பித்த வாஸ்சர்யத்தோடே கண்டாருளர். .... ... .... (சு)

அவ;—ஏழாம்பாட்டு. (வெள்ளையித்யாதி) பார்த்தஸாரதியான ப்ரகாரத்தை யநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(வெள்ளையித்யாதி). வெளுத்தநிறத்தையு மோசையுமுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யம் ஆஸ்ரித விரோதிகள் மேலே

ணம்பண்ணப்பட்டவர்களாய், ஒரொருத்தரே அத்யந்தவிலக்ஷணைகளாயிருக்கும் பதினாறாயிரந்தேவிமாரோடே. ஆயிரமிரண்டாயிரமன்றிக்கே, பதினாறாயிரமுண்டாகையாலே - "பல்லாயிரம்" என்கிறது. (பௌவமெறிதுவரை) ஸ்ரமஹாமாம்படி ஸமுத்ரத்தின் திவலைகள் வீசாநிற்கும் ஸ்ரீமத்த்வாரகையிலே. (எல்லாருமித்யாதி) தேவிமாரெல்லாருஞ்சூழஸிம்ஹாஸநத்திலே ரஸோத்தரனாயெழுந்தருளியிருந்தவனை அவ்விருப்பிலே கண்டவர்களுளர். (சு)

வ்யா.. ஏழாம்பாட்டு. (வெள்ளைவிளிசங்கு) ஸ்யாமளமான திருமேனிக்குப் பரபாகமானவெண்மையையுடையதாய் "அநுபவகைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள்" என்று தன்த்வநி

என்றதுக்கு ஆஸ்ரிதரெல்லாருமென்று சொல்லலாயிருந்ததே யாகிலும் அவனுடைய அந்தஃபுரஸ்த்திதி தோற்றவேண்டியருளுகிறார் (தேவிமாரெல்லாருமித்யாதி). ... ... ... ... ... (சு)

அரு;—ஏழாம்பாட்டு. (வெள்ளையித்யாதி)"வெள்ளையாய்விளியாநிற்கிற சங்கு" என்றுவிவக்ஷித்து, சங்கானபோதே வெளுப்பு ஸித்தமாயிருக்க, விசேஷித்ததுக்குத்தாத்பர்யமருளுகிறார்(ஸ்யாமளமானவித்யாதி), "விளி" என்றதி

நெருப்பு மிழ்ந்து செல்லும்படியான திருவாழியை ஏந்துகிறதிருக் கையுமுடையவன். (உள்ளவிடம்வினவில்) பாரதந்த்ர்யம் தோற் றஸ்வதந்த்ரனாய் நிற்கிறவிடம் எங்கேகாணலாமென்று கேட்கிறி கோளாகில். (வம்மின்) வாருங்கோள். உங்களுக்குக்காணலாவ தொரு மாற்றம் சுருங்கச் சொல்லுகிறேன்.

(வெள்ளையித்யாதி) ஶ்வேதாஶ்வவாஹநனாய் வாநரத்தை வெற்றிக்கொடியாகவுடையனுமான விஜயன் தேரின் மேலே அவ னுக்கு ஸாரதியாய் முன்னேநின்று. (கள்ளப்படைத்துணையாகி) க்ருத்ரிமமான துர்யோதநபரிகரத்துக்குப் பாபகரண விமோசந

யாலே அழையாநிற்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். (வெஞ்சுடர் திருச்சக்கரம்) ஆஶ்ரிதவிரோதிகள்விஷயத்தில், "லௌகிகாக்நி, நர காக்கிநி-தண்ணீர்" என்னும்படி வெவ்விதான சுடரையுடைய திருவாழியையும். (ஏந்துகையன்) அழகுக்கும் விரோதிநிரஸநத் துக்கு முடலாக ஸர்வகாலமும் பூவேந்தினாப்போலே தரித்துக் கொண்டிருக்கும் திருக்கைகளையுடையவன். (உள்ளவிடம்வினவில்) வர்த்திக்கிற ஸ்த்தலம் கேட்கிறிகோளாகில். (உமக்கிறைவம்மின் சுவடுரைக்கேன்) வாருங்கோள் உங்களுக்கு அவன் வர்த்திக்கிற விடத்துக்கு அல்பமடையாளம் சொல்லுகிறேன்.

(வெள்ளையித்யாதி) ஶரணாகதனாய் தனக்கபிமதனான அர்ஜு நனுடைய, வெளுத்த புரவிபூண்டிருப்பதாய், வாநரமான வெற் றிக்கொடியையு முடைத்தாயிருக்கிற தேரின்மேலே அவனுக்கு ஸாரதியாய் முன்னேநின்று. (கள்ளப்படைத்துணையாகி) க்ருத்ரி

---

னர்த்தம் (அழையாநிற்கும்) என்றது சக்ரத்தின் சுடரென்றபோதே வெம் மையுண்டாயிருக்க "வெம்" என்று விசேஷித்ததுக்குத்தாத்பர்யமருளுகிறார் (ஆஶ்ரிதேத்யாதி). இவையிரண்டையும் கையிலே ஏந்துகைக்கும் ப்ரயோஜ நத்தையும், பிடிக்குமென்னாதே "ஏந்தும்" என்றதுக்குத் தாத்பர்யத்தையு மருளுகிறார் (அழகுக்குமித்யாதி)."வம்மின் உமக்கிறை சுவடுரைக்கேன்" என் றந்வயித்தர்த்தமருளுகிறார் (வாருங்கோளித்யாதி).

"வெள்ளைப்புரவி" என்று ஶ்வேதாஶ்வத்வமும் கபித்வஜத்வமும் சொல் லுகையாலே அர்ஜுநஸாரத்யம் தோன்றுகையால், அதுக்கு ஹேதுவையரு ளிச்செய்யாநின்று கொண்டு தாத்பர்யமருளுகிறார் (ஶரணாகதனாயித்யாதி). (வெற்றிக்கொடி) ஜயத்வஜம். (எதிரியுடைய வுயிர்நிலையைக்காட்டிக்கொடுத்

ஸஹகாரியாய் நின்று. த்ருதராஷ்ட்ராதிகள் ராஜதர்மத்தை அறிந்திருக்கச்செய்தேயும், மமதையாலே ஸோஹம்பாவம் நடத்துகையாலும் ஆத்மதர்மத்திலந்வயமில்லாமையாலும் ஆத்மாத்மீயத்தை அபஹரிக்கையில் மேற்படக் களவில்லையிறே. இதுதான்ப்ராயேண அர்ஜுநாதிகளுக்கும் உற்றுப்பார்த்தாலுண்டாயிறேயிருப்பது. அவன் “ஜாநாமிதர்மம் - ஜாநாமிதர்மம்” என்றதிற்காட்டில் இவனும் கீழ்ச்சொல்லிற்றுச்செய்யாதிருக்கச்செய்தே (க) “நிஶ்சிதம்ப்ரூஹி-நிஶ்சிதம்ப்ரூஹி” என்றதுக்கு ஒருவாசியில்லையென்னுமிடம்க்ருஷ்ணன்தானே (உ)“அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்- அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்] ஶோகத்துக்கு விஷயமல்லாதவை இத்தைப்பற்ற ஶோகியாநின்றாய். [ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே-ப்ரஜ்ஞாவாதாம் ஶ்சபாஷஸே] முன்னே ராஜதர்மத்தை யறிந்தாப்போலே சிலவார்த்தையும் சொல்லா நின்றாய். [கதாஸூநகதாஸூம்ஶ்ச-கதாஸூநகதாஸூம்ஶ்ச] “கதாஸுவான ஶரீரம் எல்லாரும் நோக்கிலும் நில்லாது. அகதாஸுவான வாத்மா எல்லாருமழிக்கநினைத்தாலும் அழிக்கவொண்ணாதென்று பிரித்தறிந்தஜ்ஞாதாக்கள் ஶோகியாகள் காண்” என்றருளிச் செய்தானிறே.

(பாரதம் கை செய்யக்கண்டாருளர்) பாரதஸமரத்திலே பெரியத்வரையோடே கையுமணியும் வகுத்து *எல்லாச் சேனையுமிருநிலத்த வியச்செய்து நின்ற நிலைகண்டாருளர். ஆத்மாத்மீயாபஹாரக்ருத்ரிம மிரண்டு தலைக்கு முண்டாயிருக்கச் செய்தேயும் தர்மாதர்ம தாரதம்யத்தாலேயிறே இங்ஙனே செய்யவேண்டிற்று. யுத்தத்துக்கு இசைந்தபின்பிறே இரண்டு தாத்தார்க்கும் தான் துணையாயிற்று. அவன் துணையாமிடத்து ஸஹகாரி நிரபேக்ஷமுமாயிருக்குமிறே. ... ... ... .... (எ)

---

மப் படைத்துணையாகி; அதாவது - படைத்துணையாகிற விடத்தில் இரண்டுதலையு மறும்படி செவ்வையிலன்றிக்கே, பகலை இரவாக்கியும், “ஆயுதமெடேன்” என்று ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர்நிலையைக்காட்டிக்கொடுத்தும் செய்தவை. (பாரதம் கைசெய்யக்கண்டாருளர்) பாரத ஸமரத்தைக்கையு மணியும்வகுத்து நடத்த அத்தசையிலே கண்டவர்களுளர். ... ... (எ)

---

தும்) என்றது-பீமனும் துர்யோதநனுயாக கதாயுத்தம் பண்ணும்போது துர்யோதநன் தொடைகளைக்காட்டிக்கொடுக்கை ... ... (எ)

---

(க) கீ-உ-எ. (உ) கீ-உ-கக.

மூ.—நாழிகைகூறிட்டுக் காத்துநின்ற வரசர்கள்தம்முகப்பே
நாழிகைபோகப் படைபொருதவன் தேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன் றிரவிமறைப்பச் சயத்திரதன் றலையைப்
பாழிலுருளப் படைபொருதவன் பக்கமேகண்டாருளர்.

அவ;—எட்டாம்பாட்டு (நாழிகையித்யாதி)கீழ் கள்ளப்படை யென்றத்தை வ்யக்தீகரிக்கிறர் இப்பாட்டால்.

ஸ்வா;—(நாழிகையித்யாதி) ஜயத்ரதனை ராஜாக்களெல்லாரும் தனித்தனியே நாழிகைகூறிட்டுக் காத்துநிற்க, அவர்கள் முன்னே. (நாழிகைபோக)"பகல்நாழிகை சென்றது" என்றுதோன்றும்

வ்யா. எட்டாம்பாட்டு. (நாழிகையித்யாதி) "ஜயத்ரதனை அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்லக்கடவேன்" என்று அர்ஜுநன் ப்ரதிஜ்ஞைபண்ண, அதுக்கிடமறும்படி ஒரு புருஷப்ரமாணமன்றியே தீர்க்கனானவனை ஒரு புருஷப்ரமாணமாகக் குழிக்குள்ளே நிறுத்தி, "நீங்கள் இன்னதனை நாழிகை காத்துக்கொள்ளுங்கோள், நாங்கள் இன்னதனைநாழிகைகாத்துக்கொள்ளுகிறோம்" என்று பகல் முப்பது நாழிகையும் இவனுக்கு ஒருநலிவு வாராதபடி காத்துக்கொண்டு நின்ற அதிரத மஹாரதரான ராஜாக்கள் தங்கள்முன்னே. (நாழிகைபோகப் படைபொருதவன் தேவகிதன்சிறுவன்) பகல் நாழிகை முப்பதும் போய்த்ததென்று தோற்றும்படியாகப் படைபொருதவனான தேவகீபுத்ரன். நாழிகைபோகப் படைபொருகையாவது - திருவாழியைக்கொண்டு ஆதித்யனை மறைக்கை. அது தான் மேலேசொல்லப்படாநின்றதிறே. கீழிற்

அரு;—எட்டாம்பாட்டு. (நாழிகையித்யாதி). நாழிகை கூறிட்டுக்காக்கைக்கு ப்ரஸக்தி பூர்வகம் தாத்பர்யமருளுகிறர் (ஜயத்ரதனித்யாதி). (ப்ரதிஜ்ஞை பண்ண) என்றது - அபிமந்யுவதநிமித்தமாக ப்ரதிஜ்ஞை பண்ணவென்றபடி. (இன்னதனை) என்றது - இத்தனை யென்றபடி. க்ருஷ்ணன் படை பொருதத்தாலே நாழிகை போகக்கூடுமோ வென்ன வருளுகிறர் (பகல் நாழிகையித்யாதி). படை பொருகையாவது-ஒருவன்மேலே ஆயுதத்தை ப்ரயோகிக்கை; அத்தாலே (நாழிகை போயிற்றென்று தோற்றும்படி யெங்ஙனே யென்னவருளுகிறர் (நாழிகை போகவித்யாதி). இத்தால் ஆதித்யன் மேலே ஆயுதப்ரயோகம் பண்ணி மறைக்கையாலே நாழிகை போயிற்றென்று தோற்றிற்றென்று தாத்பர்யம். இதுக்கு நியாமகம் (அதுதானித்

படியாக. (தேவகிதன் சிறுவன்)தேவகீ புத்ரன். (அன்று) அவனைக் குழிச்குள்ளே நிறுத்தின வன்று. அதுக்கடி அர்ஜுநன்ப்ரதிஜ்ஞை பண்ணுகையாலேயிறே. (ஆழிகொண்டன்றிரவி மறைப்ப) கருதுமிடமறிந்து பொரும் திருவாழியைக்கொண்டு மறைத்தவளவிலே அஸ்தமித்ததென்று குழியில் நின்றும் கரையிலே புருஷத்வயாக்ருதி தோன்ற நின்றவளவிலே,இருள்பரப்பினதிருவாழியை வாங்க, அந்தஜயத்ரதன்தலையைத் தலைபடைத்த ப்ரயோஜநம் பெறுமல் பாழிலே கிடந்துருளும்படி "படைபொருதவன்" என்னும்படி படைபொருத அர்ஜுநனருகே கண்டாருளர்.

---

பாட்டில், "திருச்சக்கரமேந்துகையனுள்ளவிடம் வினவில்" என்றாப்போலே, இங்கும், "தேவகிதன்சிறுவன் - உள்ளவிடம் வினவில்" என்று கூட்டிக்கொள்வது; அதுக்கடி - பூர்வோத்தரங்களுக்குச் சேரவேண்டுகையாலே.

(ஆழிகொண்டன்றிரவிமறைப்ப) அப்படி அவர்கள் காத்துக் கொண்டு நின்றவன்று பகல் நாழிகை சென்றதாக் தோற்றும்படி நினைவறிந்து கார்யஞ்செய்யும் திருவாழியைக்கொண்டு ஆதித்யனை மறைக்க. (சயத்திரதனித்யாதி) "ஆதித்யனஸ்தமித்தான்" என்று அவனைக் குழியினின்றும் அவர்கள் கிளப்பி நிறுத்தினவளவிலே, இருள் பரப்பின திருவாழியைப்போர நிறுத்தி, ஜயத்ரதனுடைய தலையைப் பாழிலே கிடந்துருளும்படி அம்பாலேபொருத அர்ஜுநனுடையவருகே கண்டாருளர். நிரவதிகதேஜோரூப

---

யாதி). (அதுக்கடி) என்றவநந்தரம் "ப்ரக்ருதத்துக்குச்சேருகை. அதாவது" என்றத்யாஹரித்துக்கொள்வது. (சேரவேண்டுகையாலே) என்றவநந்தரம் "கூட்டவேணுமென்கை" என்று சேஷம்.

"அன்றுழி கொண்டிரவி மறைப்ப" என்றந்வயித்து ஆழிமறைக்கைக்கு ஹேதுவையுமருளிச்செய்து கொண்டர்த்த மருளுகிறுர் (அப்படியித்யாதி). க்ருஷ்ணன் இரவியை மறைத்தால் குழியிலே மறைத்துவைத்த ஜயத்ரதன் தலையையுருட்டும்படி யெங்ஙனே யென்னவருளுகிறுர் (ஆதித்யனித்யாதி). (பாழிலே) என்றது-ஜயத்ரதன் தமப்பனிருக்கும் விஜநப்ரதேசத்திலேயென்றபடி. (அருகே) என்றவநந்தரம் இருக்கு மவனை யென்று சேஷம், கீழேபோ

இனிஆதித்யாதி தேஜஸ்ஸுக்குமவ்வருகானதேஜஸ்ஸை யுடையதிருவாழியாழ்வானாலே ஆதித்ய தேஜஸ்ஸை மறைக்கும் படியென்னென்னில், திருவாழியாழ்வானுக்கு தேஜஸ்ஸாவது அவன் திருவுள்ளத்துக் கிடானவடி வெடுக்கையும், அந்த வடிவுக்குத் தகுதியான நிறத்தை ஸம்பாதிக்கையுமிறே. அவன்தனக்கும் * இருளன்னமாமேனி அஸாதாரணமா யிருக்கச்செய்தேயும், யுகவர்ணக்ரமாவதாரங்களிலே(க)"பாலின்நீர்மைசெம்பொன்நீர்மை" என்பது(உ)"முன்னைவண்ணம்பாலின்வண்ணம்" என்பதுவெறும்புறத்தில்(ந)"நிறம்வெளிதுசெய்துபசிதுகரிது" என்பது.(ச)"தமருகந்ததெவ்வுருவம்"என்பதானஅவனோடேநித்யஸாரூப்யஸித்தனானவனுக்கு அவன் திருவுள்ளத்துக்கிடாக வேண்டின நிறம்பரப்புகை அரிதோ? ப்ராக்ருததேஜஸ்ஸு அப்ராக்ருதலோகத்தில் செல்லிலும் அப்ராக்ருததேஜஸ்ஸு ப்ராக்ருதலோகத்தில்வருகையரிதிறே; அங்குள்ளாரும் இங்குவந்தால் இங்குள்ள நிறம் மூன்றிலே அவன் திருவுள்ளத்துக் கிடாக வொன்றை யெடுக்குமத்தனையிறேயுள்ளது. இத்தால் ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்குக்குறைவாராதிறே.

அன்றியே, திருவாழி யாழ்வானுடைய தேஜஸ்ஸின்மிகுதியாலே இருண்டு தோன்றிற்றென்பாருமுண்டு. சந்த்ரதுல்யமான

---

மான திருவாழியாலே ஆதித்யனை மறைத்தாலும் லோகத்துக்கு மிகவும் வெளிச்செறிப்புண்டாமித்தனையன்றோ, "ஆதித்யனஸ்தமித்தான்" என்னும்படி கண்களுக்கு இருண்டு தோற்றுவானென்னென்னில்; இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே தமஸ்ஸுபோம் படியாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸுநேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணை யிருளப்பண்ணிற்று.

---

நிறுத்தி) என்றதுக்கு இத்தொடர்வயம். (பளபளத்து) என்றது -கண்கள் தேஜஸ்ஸாலே ப்ரதிஹதஶக்திகளாம்படி தானே ஸ்ப்புரித்தென்றபடி. கோட்டானுக்குக் கண் ஸூர்யகிரணங்களாலே ப்ரதிஹதங்களாய் இருண்டு தோன்றுமாபோலே, அக்காலத்திலுள்ளவர்களுக்கும் இருண்டு தோன்றத் தட்டில்லையென்று கருத்து. .... ... ... (அ)

---

(க) தி-ச-வி-சச. (உ) தி-மொ-ச-கூ-அ. (ந) ௩-திருவ-௫௬. (ச) க-திருவ-சச.

மூ.—
மண்ணுமலையு மறிகடல்களு மற்றும் யாவுமெல்லாம்
திண்ணம் விழுங்கியுமிழ்ந்த தேவனைச் சிக்கனநாடுதிரேல்
எண்ணற்கரியதோ ரேனமாகி யிருநிலம்புக் கிடந்து
வண்ணக்கருங்குழல் மாதரோடு மணந்தானைக் கண்டாருளர் (கூ)

ஜலராஸியும் இருண்டு தோன்றாநின்றதிறே. திமிரஹரத்வமேயி றே சந்த்ரனுக்குள்ளது. தேவகி தன்சிறுவனை நாடுதிரேல்.

"நாழிகை கூறிட்டுக்காத்து நின்றவரசர்கள்தம் முகப்பேநாழிகைபோக, ஆழிகொண்டன்றிரவிமறைப்பச்சயத்திர தன்தலையைப் பாழிலுருளப்படைபொருதவன் என்னும்படி படைபொருதவன் பக்கமே கண்டாருளர்" என்றந்வயம். .... .... (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு (மண்ணித்யாதி) கீழ்ப்பாட்டிலே பாண்டவபக்ஷபாதியாய் அவர்களுடைய ஆபத்விமோசகனான ப்ரகாரத்தை அநுஸந்தித்தார். இதில் ஜகத்துக்கெல்லாம் வந்த வாபத்தை அபேக்ஷாநிரபேக்ஷமாகரக்ஷித்தபடியை அநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(மண்ணித்யாதி) எல்லார்க்குமாதாரமான பூமியையும், அந்த பூமிக்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற பர்வதங்களும், இந்த பூமிக்கு ரக்ஷமாகச் சூழ்ந்துதிரைமறியும்படியான ஸமுத்ரங்களும், (மற்றும் யாவுமெல்லாம்) மற்றும் அநுக்தமான யச்சப்தவாச்யங்களுமெல்லாம், (திண்ணமித்யாதி) தன்ஸங்கல்பத்

இதுதான் (க)"ஆழியாலங்கன்றாழியைமறைத்தான்" என்கிறவிடத்திலே பூர்வர்களருளிச் செய்தார்களிறே. ... ... (அ)

வ்யா;— ஒன்பதாம்பாட்டு. (மண்ணுமித்யாதி) ஸர்வாதாரையான பூமியும், அது தனக்காதாரமான பர்வதங்களும், பூமிக்குரக்ஷகமாகச் சூழ்ந்து திரைமறிகிறஸமுத்ரங்களும் மற்றுமுண்டான ஸர்வபதார்த்தங்களுமான இவை யெல்லாவற்றையும். (திண்

அரு;—ஒன்பதாம்பாட்டு. (மண்ணுமித்யாதி) "விழுங்கி"என்றதுக்கநுகுணமாக மண்ணுமித்யாதியை த்விதீயாந்தமாக்கி வ்யாக்யாநம் செய்து எல்லாத்துக்கும் முன்னே மண்ணைச் சொன்னதுக்குக் கருத்தருளுகிறார் (ஸர்வாதாரையான வித்யாதி'. (திரைமறிகிற) என்றது-அலைசுருண்டுவருகிறவென்றபடி. "திண்ணம்" என்றதுக்கு வ்யாவர்த்த்யாபூர்வகமாகவும்விழுங்குகைக்

(க) தி-மொ-ரு-எ-அ.

பெரியாழ்வார்திருமொழி, ச-ப, க-தி, கூ-பா, மண்ணும். அளள

தாலே இவற்றையெல்லாம் தனக்குள்ளே யாக்கி. (திண்ணம்) ஸங்கல்பம். (உமிழ்ந்ததேவனை) இவை வெளிநாடுகாணும்படி உமிழ்ந்து ரக்ஷித்த ரக்ஷகனை. (சிக்கென நாடுதிரேல்) மேலெழத்தேடி "கண்டிலோம்; அவனுக்கு வேண்டாவாகில் எனக்கோ வேண்டுவது" என்றாப்போலே சொல்லி அநாதரியாதே, அவனைக்காணுமளவும் மஹா விஸ்வாஸத்தோடே தேடிக்கோளாகில்.

(எண்ணற்கித்யாதி) ஈத்ருக்தயா இயத்தயா அளவிடவொண்ணாத அத்விதீயமான மஹாவராஹமாகி; (க)"மானமிலாப்பன்றி" என்னக்கடவதிறே. (இருநிலமித்யாதி) பாதாளகதையான மஹாப்ருதிவியை உள்ளேபுக்கு அண்டபித்தியில் நின்று மொட்டு விடுவித்

---

ணம் விழுங்கி உமிழ்ந்ததேவனை) ஐந்த்ரஜாலிகரைப் போலன்றிக்கே, நிஸ்சயமாக ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றினுள்ளேவைத்து, ப்ரளயம்கழிந்தவாறே வெளிநாடுகாண உமிழ்ந்து, இப்படி ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப் பண்ணுகையால் வந்த புகர் வடிவிலே தோற்றும்படியிருந்தவனை. (சிக்கெனநாடுதிரேல்) மேலெழத்தேடி "கண்டிலோம்" என்று மீளுகையன்றிக்கே, "கண்டேவிடவேணும்" என்னும்ஊற்றத்துடனே தேடுகிறிகோளாகில்

(எண்ணற்கரியதோரேனமாகி) அழகாலும் வடிவிற்பெருமையாலும் மநஸ்ஸாலே பரிச்சேதிக்க வொண்ணாதபடியிருக்கையாலே அத்விதீயமான மஹாவராஹமாய். (இருநிலம்புக்கிடந்து) மஹாப்ருதிவியை ப்ரளயத்திலேமுழுகி அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்து. (வண்ணமித்யாதி) தன்னுடைய அபிமாநாந்தர்ப்

---

கும் உமிழ்கைக்கும் ப்ரயோஜநமுகேநவும் "தேவனை" என்றதுக்குஹேதுபூர்வகமும் தாத்பர்யமருளுகிறார் (ஐந்த்ரஜாலிகேத்யாதி).

(உ)மஹாவராஹஸ்ஸ்புடபத்மலோசந:- மஹாவராஹஸ்ஸ்புடபத்மலோசந:" என்கிற வசநத்தையுட்கொண்டு ஹேதுபூர்வகமாகத் தாத்பர்யமருளுகிறார் (அழகாலுமித்யாதி). இருமை - பெருமையென்று திருவுள்ளம்பற்றி, புக்கிடந்தப்ரகாரத்தையுமருளுகிறார் (மஹாப்ருதிவியையித்யாதி). "வண்ணம்" என்று அழகாய், "மாதர்" என்று ஸ்த்ரீயாய், "மணந்தானை" என்று கலந்தானையென்று விவக்ஷித்து, கலக்கைக்கு ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (தன்னுடைய வித்யாதி). ... ... ... ... (கூ)

---

(க) நா-தி-கக-அ.

மூ.—கரியமுகில்புரைமேனி மாயனைக்கண்ட சுவடுரைத்துப்
புரவிமுகஞ்செய்து செந்நெலோங்கிவிளை கழனிப்புதுவைத்
திருவிற்பொலிமறைவாணன் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும்
பரவுமனமுடைப் பத்தருள்ளார் பரமனடி சேர்வர்களே.
பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

தெடுத்து(க)"மண்ணுந்தானத்தவே" என்கிறபடியேயதாஸ்த்தானத்திலே வைத்து, இதுக்கபிமாநிநியாய், நாட்டில் கருமைவெண்மையாம்படி கருவண்ணக்குழலையுடைய மாதரோடே மணந்தானைக் கண்டாருளர். ... .... ... (கூ)

அவ்;—நிகமத்தில் இத்திருமொழி கற்றூர்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

ஸ்வா;—(கரியவித்யாதி). நீர் கொண்டெழுந்த காளமேகம் போலே ஶ்ரமஹரமான திருமேனியையுடைய வாஶ்சர்யஶக்தியுக்தனை. (கண்டவித்யாதி) சிக்கெனநாடுவார்க்குக்கண்டவடையாளங்களை உரைத்து "கண்டாருளர்" என்று கண்டவர்களைக்காட்டி, அவன் தன்னைக் காண்பதிலும் அவனைக்கண்டவர்களைக் காண்கை

---

பூதையான பூமியை, இப்படி ப்ரளயத்தினின்று மெடுத்தமையைக் கண்ட ஹர்ஷத்தாலே, அதுக்கு அபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டி வந்தணைக்க, அழகியதாய்க் கறுத்திருந்துள்ள திருக்குழலையுடையவளோடே கலந்து வந்தவனைக் கண்டாருளர். ... ... (கூ)

அவ;—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்குப்பலம்சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

வ்யா;—பத்தாம்பாட்டு. (கரியமுகில்புரைமேனிமாயனை) காளமேகம்போன்ற வடிவையுடையனுய், ஆஶ்சர்யமானகுணசேஷ்டிதங்களை யுடையனுனவனை. (கண்டசுவடுரைத்து) "காணவேணும்" என்று தேடுகிறவர்களுக்கு, கண்டவடையாளங்களைச்சொல்லி. தேடுகிறவர்களுடைய அவஸ்த்தையையும், கண்டவர்களுடை

---

அரு,—நிகமத்தில் - "கண்டசுவடுரைத்து" என்றிருக்கையாலே கண்டவரும் உரைத்தவரும் தாமேயானுலும் தேடினவர்கள் இவராகைக்கு நியாமகமில்லாமையால், வேறு தேடினவர்களா ரென்ன வருளுகிறூர் (தேடுகிறவித்யாதி). "இன்னூர்க்குரைத்து" என்று சொல்லாமையாலே அவர்களும் தாமேயென்னலாமென்றுகருத்து. (கண்டவர்களுடையவவஸ்த்தையையும்) என்றது

---

(க) தி-வாய்-எ-ச-ரு.

தானே உத்தேஶ்யமென்று, (புரவியித்யாதி) செங்நெலானவை மிகவும் வளர்ந்து கதிர்ச்செறிவாலே குதிரை முகம் செய்துவிளைகிற வயலையுடைய திருமாளிகைக்கு நிர்வாஹகராய் ஶ்ரீவைஷ்ணவஶ்ரீயிலே மிகுந்த மறையே வாழ்வாக வுடையராய், ப்ராஹ்மணோத்தமர்க்கும் ஃவதப்பயன் கொண்டு உபகாரகரானவாழ்வாரருளிச் செய்த இம்மாலை பத்தும; இவரபிமாநத்திலே ஒதுங்குகைதானே புருஷார்த்தமாக ஸ்தோத்ரம் செய்யும் நல்ல மநஸ்ஸோடே ஸ்நேஹிகளாயுள்ளார். (பரமனடிசேர்வர்களே) ஸர்வஸ்மாத்பரனானவனுடைய திருவடிகளிலேசேரப்பெறுவர். இங்கேயிருந்து "நாடுதிரேல் கண்டாருளர்" என்ன வேண்டாத தேசத்திலேபோய்ச் சேரப்பெறுவர். அன்றிக்கே தேடினவிந்ததேசந்தன்னிலேவிடாய்த்தவிடத்திலே சிலபரமதார்மிகராலே தண்ணீர் பெற்றாப்போலே, கண்டார் காட்டக்காணப் பெறுவரென்னவுமாம். .... ... (கo)

பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ய வவஸ்த்தையையு மடைந்துபேசினார்தாமேயிறே.(புரவியித்யாதி) செந்நெற்களானவை யுயரவளர்ந்து கதிர்க்கனத்தாலேகுதிரை முகம் போலே தலைவணங்கி விளையாநின்றுள்ள கழனிசளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், (க)"பரமனைப்பயிலும் திருவுடையார்" என்கிறபடியேபகவதாஸத்திரூபையான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால் மிக்கிருப்பாராய், * வேதப்பயன் கொள்ளவல்லவராகையாலே வேதத்துக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த மாலையான விப்பத்தையும். (பரவுமித்யாதி) ப்ரீதிபரவசராய்க்கொண்டு அடைவுகெடப்பேசும் மநஸ்ஸையுடைய பக்தராயுள்ளவர்கள். (பரமனடிசேர்வர்களே) காண்கைக்குத்தேட வேண்டாதே நித்யாநுபவம் பண்ணலாம்படி, ஸர்வஸ்மாத்பரனானவனுடைய திருவடிகளைச் சேரப்பெறுவர்கள். ... ... ... (கo)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து, முதல் திருமொழி முற்றிற்று.



---

த்ருஷ்டாந்தார்த்தம். "செந்நெலோங்கிப் புரவி முகஞ்செய்து விளைகழனி" என்றந்வயித்து புரவிமுகம் செய்கைக்கு ஹேதுபூர்வகமர்த்த மருளுகிறார் (செந்நெல்களித்யாதி). ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) தி-வாய்-௬-௭-க.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாம்பத்து இரண்டாம் திருமொழி
## அலம்பாவெருட்டா ப்ரவேசம்.

ஸ்வா;—கீழில்திருமொழியில் "அலையார் கடற்கரை வீற்றிருந் தானைக்கண்டாருளர்" என்று கொலையானை கொம்புபறித்த க்ருஷ்ணனோடே கூட்டி அநுஸந்திக்கையாலே அவ்விரண்டவதாரத்தை யும் அவ்வோகாலத்தில் கண்டவர்கள் காட்டும்போது அவைதே ஶாந்தரகத மாகையாலும், காலாந்தரகதமாகையாலும், ஸர்வதேச ஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வர்க்கு முசிதமாக * பின்னானார்வணங்கு மிடத்திலேயிறே விபவத்திலே காணவேணுமென்றவர்களுக்கும் காட்டலாவது. விபவம்நிலைநிற்குமிடத்திலே காட்டவேணுமே. இதுதான் அவ்வவகாலங்கள் தன்னிலுமுண்டிறே; ஆனாலும் அதுதானேயிறே பின்னானார்க்கும் வணங்கலாவதும்.

---

## அலம்பாவெருட்டா ப்ரவேசம்.

அவ;—க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களை நெடுக அநுபவித்துக்கொண்டு போந்து, அவைத்துடனே ராமாவதாரகுணசேஷ்டிதங்களையும் அநுபவித்த வநந்தரம், "தத்ததவதாரவிசிஷ்டனான ஸர்வேஸ்வரனைக் கண்ணாலேகண்டு அநுபவிக்கவேணும்" என்னும் அபேக்ஷைபிறந்து தமக்கு ஒரு புடை நடந்து செல்லுகிறபடியையும், தமக்கு மாநஸாநுபவ வைஶத்யத்தாலே அவன்றன்னைக் கண்ணாலே கண்டாற்போலே ஒருபுடை ப்ரகாசிக்கிறபடியையு மநுஸந்தித்து, அவையிரண்டையும் "அவனைக்காணவேணும்" என்று தேடுகிறார் சிலரும், "அப்படிதேடுகிறிகோளாகில் கண்டார் சிலருளர்" என்று சொல்லுகிறார் சிலருமாக, தம்மை இரண்டுவகை யாக்கிக் கொண்டு பேசினாராய் நின்றார் - கீழ்:

"அவதாரங்கள் தன்னைக் கண்ணாலே கண்டநுபவிக்கவேணும்" என்னும் ஆசைபிறந்தாலும் பெருக்காறுபோலே அவை

---

அரு,-அலம்பாப்ரவேசம். வண்ணமாடங்கள் தொடங்கிகதிராயிரத்தளவும் வரவிபவாவதாரங்களை அநுபவித்துக்கொண்டுவந்தவிவ்வாழ்வார், அவைபெருக்காறுகள் போலேயிருக்கையாலே அவற்றில் தேங்கினமடுக்கள் போலேயிருக்குமர்ச்சாவதாரங்களை அநுபவிக்கக்கோலி தெற்கில் திருமலையை அநுபவிக்கிறாரென்று ஸங்கதியருளுகிறார் (க்ருஷ்ணாவதாரேத்யாதி). (உகந்தருளின நிலங்

அது தன்னை அவனுக்கத்யந்தாபிமதையான ஸ்ரீ பூமி நாய்ச்சியார் திருமுலைத்தடம்போலேவிரும்புமதாய்,(க)"நங்கள்குன்றம் கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம் செய்யப்படுமதாய், "மாலிருஞ்சோலை யென்னும் மலையையுடையமலை" என்னும்படி அவ்விருப்புமாறாமல் அழகர் ஸ்வரூபரூபகுணவிபூதிகளோடே (உ)"மாலிருஞ்சோலை நம்பி" என்னும்படி ப்ரகாசித்தவிடத்திலே அவரிலும் அத்திருமலைதன்னையே உத்தேஶ்யமாகக்காட்டிமங்களா

தத்காலத்திலுள்ளார்க்கு அநுபாவ்யமாய், பிற்காலத்திலுள்ளார்க்குக் கிடையாததாயிருக்கிறபடியையும், (ந)"பின்னானார்வணங்குஞ் சோதி" என்கிறபடியே அவதாரத்தில் பிற்பாடரானவர்களுக்கும் இழக்கவேண்டாதபடி ஸர்வேஶ்வரன் அர்ச்சாவதாரமாய்க்கொண்டு உகந்தருளின நிலங்களிலே அந்த அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படியாகவெழுந்தருளி நிற்கிறபடியையுமநுஸந்தித்து, உகந்தருளின நிலங்களிலே அவனை யநுபவிக்கக்கோலி அவை யெல்லாவற்றிலும், (ச)"தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையு மென்னுமிவையேமுலையாவடிவமைந்த" என்கிறபடியே—ஸ்ரீ பூமிப்பிராட்டிக்குத் திருமுலைத்தடங்களாம்படி யிருக்கையாலே அவனுக்கு அத்யந்தாபிமத ஸ்த்தலங்களாயிருக்கிற திருமலைகளிரண்டிலும் வைத்துக்கொண்டு, தெற்குத்திருமலையிலே நிற்கிறநிலையிலே அநுபவிப்பதாக முந்துற இழிந்து, ராமக்ருஷ்ணாத்யவதார சேஷ்டிதங்களெல்லாம் அந்நிலையிலே ப்ரகாசிக்கிறபடியை யநுபவியாநிற்கச் செய்தே, தத்விஷயத்திலும் ததீயவிஷயமே ப்ராப்யத்துக்குச் சரமாவதியாக அறுதியிட்டிருக்குமவராகையாலே, * கிளரொளியிளமையில் ஆழ்வாரநுபவித்ததாப்போலே, "அங்கேயெழுந்தருளிநிற்கிற அழகரிலுங்காட்டில் அவர் விரும்பியெழுந்தருளி நிற்கிற திவ்யஸ்த்தலமான திருமலையே பரமப்ராப்யம்" என்று அநுஸந்தித்து, அத்திருமலையினுடைய வைபவத்தை பஹுமுகமாகப் பேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... *

களிலே-யநுபவிக்கக் கோலி) என்றது-ப்ராயேண இப்ரபந்த ஶேஷத்தாலே அநுபவிக்கக் கோலியென்றபடி. ... ... ... *

(க) தி-வாய்-க0-எ-ச.(உ)நா-தி-கூ-ந.(ந) தி-நெ-க0. (ச)பெரி-திருமடல்-கூ.

மூ.—அலம்பாவெருட்டாக் கொன்றுதிரியு மரக்கரைக்
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்ற கோன்மலை
சிலம்பார்க்கவந்து தெய்வமளிர்க ளாடுஞ்சீர்ச்
சிலம்பாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே. (க)

ஶ்ராஸநபர்யந்தமாக வநுஸந்திக்கிறார். உத்தேஶ்யவிஷயத்தைக் காணவேணுமென்று ஆசார்யபரதந்த்ரனைக்கேட்டவர்களுக்கு, நீங்கள் கேட்கிறிகோளாகில் நீங்கள் அபேக்ஷிக்கிற விஷயத்தை "கண்டாருளர்" என்று கண்டவர்களைக்காட்டினால், அந்தக் கண்டவர்களை நீங்கள் கண்டாப்போலே காட்டவேணுமென்ற பேக்ஷித்தால் அவர்கள் காட்டுவது-அர்சாவதாரத்தை அநவரதகாலமும்ஶிரஸா வஹிக்குமவர்களையிறே.

இதில் நாடுகிறவர்களார். நாடுதிரே லென்கிறவர்களார். நாடும் விஷயந்தானெது? அந்த விஷயத்தை நாடாமல் கண்டு பிரிந்துகாணவேணுமென்று நாடுகிறவர்களாரென்னில்; நாடுமவர்கள் - சென்று பொருள் படைப்பான் கற்றதிண்மையையுடையவர்கள். நாடுதிரேலென்கிறவர்கள்-*பயிலும் சுடரொளி, *நெடுமாற்கடிமை *கண்ணிநுண்சிறுத்தாம்பு முதலானவற்றிலே நிலைநின்ற அத்யவஸாய ஸ்ரீயையுடையவர்கள். நாடும்விஷயம் - ராமக்ருஷ்ணத்யவதாரங்கள். இவ்விஷயத்தை நிலைநிற்கக்கண்டுஉளராம்படிஉளரானவர்கள் ஆழ்வார்கள். "மெய்ம்மையே கண்டாருளர்" என்றும், "மருவுமிடம் நாடுதிரேல்" என்றும் உண்டாகையாலே,*நங்கள்குன்றத்தையும்அத்தைக் கைவிடாமல்"இவனவன்" என்று தேஶகால நியமமின்றி நித்யவாஸம் செய்கிற *முடிச்சோதியிலழகரையுமுத்தேஶ்யமாகப் பேசுகிறார். ... .... (*)

ஸ்வா;—முதற்பாட்டு. (அலம்பாவெருட்டா) ஆரவாரித்து

வ்யா;—முதற்பாட்டு. (அலம்பா) ப்ராணிகளையிருந்த விடத்திலிருக்கவொண்ணாதபடி அலைத்து. அதாவது – "இவர்கள் கீழ்

அரு;—முதற்பாட்டு. (அலம்பாவித்யாதி) அலம்புதல்-அலைப்புதலாய், அதுக்கு ஶப்தார்த்தமருளுகிறார் (ப்ராணிகளையித்யாதி). இப்படி அலைக்கை அரக்கர் தாங்கள் ப்ராணிகளைக்கிட்டி வந்து பண்ணும் வ்யாபாரமாகத்தோற்றுகையாலே, உக்ரவேஷாதிகளைக் காண்கையால் வந்த பயத்துக்கு முன்னே சொல்லக்கூடாதென்று திருவுள்ளம்பற்றி மாநஸவ்யதையாகத் தாத்பர்யமருளுகிறார் (அதாவதித்யாதி). வெருளுகையை ஹேதுபூர்வகம் விவரிக்கிறார்

† சீட்கைவிளைத்துஅஞ்சப்பண்ணி அஞ்சினாரைக்கொன்று அதுவே யாத்ரையாய்த் திரியுமரக்கரைஅதுக்கடிஜந்மதோஷம்).குலம்பாழ் படுத்து)பாழாளாகப்படைபொருதானுக்கு. விபீஷணன்அவர்களு

நமக்கு வர்த்திக்கப்போகாது, எங்கே போவோம்'' என்று நின்று தளும்பும்படி பண்ணுகை. (வெருட்டா) வெருளப்பண்ணி. அதாவது - தங்களுடைய உக்ரவேஷங்களையும் உக்ரவ்யாபாரங்களையும் கண்டுபயப்படும்படி பண்ணுகை. அன்றிக்கே, ''அலம்பா வெருட்டா'' என்றதுக்கு - ஆரவாரித்துச் சீட்கை விளைத்து அஞ்சப் பண்ணி யென்னவுமாம். (கொன்றுதிரியும்) அவ்வளவுமன்றிக்கே, கொலைக்கஞ்சாமல் கொன்று, அதுதானே யாத்ரையாய்த் திரியா நிற்கும். (அரக்கரை) கீழ்ச்சொன்னவை யெல்லாவற்றுக்கு மடியான ஜந்மத்தையுடையவர்களை. கள்ளர், பள்ளர், வலையர் முதலானார்க்குப்ராணிகளை அலைக்கையும் பயப்படுத்துகையும் கொல்லுகையும் ஜந்மஸித்தமாய் வருமாபோலே, இவர்களுக்கும் இது ஜந்மஸித்தமாய் வருமாய்த்து. காதூஷணாதிகளும் ராவணாதிகளுமான ராக்ஷஸர் த்ரைலோக்யத்தையும் இப்படி பீடித்துக்கொண்டிறே திரிந்தது.

(குலம்பாழ்படுத்து) அவர்களை நிரஸிக்கிறவிடத்தில் அவர்கள் தங்களளவன்றிக்கே மறுகிளையறும்படி குட்டிக்கொலையாகவறுத்துப் பொகடுகையாலே, குலமாகப் பாழ்பட்டுப்போம்படிபண்ணி,

(அதாவதித்யாதி). அலம்புதல்-வாசிகமான வலைச்சலாக்கி அதுக்கு அரக்கருடைய வாரவாரத்தை ஹேதுவாகக் கருதி யோஜநாந்தரமருளுகிறார் (அனறிக்கேயித்யாதி . (சீட்கை விளைத்து) என்றது-பயிலிட்டென்றாய், கூசலிட்டென்றபடி. இத்தால் கூசலிடும்படி பயமுறுத்தி யென்கை. (கொலைக்கு) என்றது - கொல்லுகைக்கென்றபடி. ''திரியும்'' என்றவிடத்தில்வர்த்தமானார்த்தம் (அதுதானே யாத்ரையாக) என்றது. கொன்று திரியுமவரை யென்னவமைந்திருக்க, அரக்கரை யென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (கீழித்யாதி). ஜந்மஸித்தமாக பரஹிம்ஸையே யாத்ரையாயிருக்கக்கூடுமோ வென்னவருளுகிறார் (கள்ளரித்யாதி). இப்படியிருக்கு மரக்கர்கள் தானென்ன ப்ரமாண ப்ரஸித்தியைப்பற்ற விசேஷிக்கிறார் (கரதூஷணேத்யாதி).

(குட்டிக்கொலையாக) கர்பத்திலே சிசுவும் நசிக்கும்படி. ராவணன் தம்பியான விபீஷணாதிகளிருக்க, குலமாகவென்னக் கூடுமோ வென்னவருளுகிறார்

† பா-சீட்கைப்பிடித்து.

க்குக்கூட்டன்றென்னு †மதுக்குஸூசகம் பெருமாள் இக்ஷ்வாகுவம்ஶஜஞக நினைத்து வார்த்தையருளிச்செய்தது. (குலவிளக்காய்நின்ற) ராவணன் திக்விஜயம்பண்ணினவன்றுதொடங்கி இக்ஷ்வாகுவம்ஶம்ஒளிமழுங்கிக்கிடந்தது; பெருமாள் திருவவதரித்தபின்பிறேகுன்

---

ஸ்ரீவிபீஷணனும் அவனோடே சேர்ந்தவர்களும் அவர்களுக்குக் கூட்டல்லர்களிறே. (க) "பொல்லாவரக்கனைக்கிள்ளிக்களைந்தானை" என்றது - "நல்லவரக்கருமுண்டு" என்று திருவுள்ளம்பற்றியிறே. (உ) "இலங்கையரக்கர்குலம் முருடுதீர்த்தபிரான்" என்றிறே ஆழ்வாரும். ஜந்மம் அதுவானாலும் அதுக்கீடான வ்யாபாரமில்லாதபோதே அவர்களில் வ்யாவ்ருத்தனுப் விடுமிறே. (ங) "விபீஷணஸ்து-ய:ஜ்ஞாதா நத-ரா:க்ஷஸசேஷ்டித:-விபீஷணஸ்து தர்மாத்மா நதுராக்ஷஸசேஷ்டித:" என்றார்களிறே - அவர்கள் தாங்களே. (ச) "ஆக்யாஹிமமதத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று - இக்ஷ்வாகுவம்ஶ்யனுக நினைத்து, பெருமாள் கைக்கொண்டருளின போதே அந்தஜந்மந்தானும் மாறிப்போய்த்திறே. ஆகையால், இவ்விடத்தில் சொன்னவரக்கர் - ராவணுதிகளும் அவர்களோடு சேர்ந்தவர்களும். ஆதலால் "குலம் பாழ்படுத்து" என்னக்குறையில்லை.

(குலவிளக்காய்நின்ற) ராவணன் திக்விஜயம்பண்ணினவன்று தொடங்கி ஒளிமழுங்கிக்கிடந்த இக்ஷ்வாகுவம்ஶம், பெருமாள் திரு

---

(விபீஷணேத்யாதி). "கூட்டல்லர்கள்" என்றதை ப்ரமாணமுகேநஸ்த்திரீகரிக்கிறார் (பொல்லாவித்யாதி). "குலம்பாழ்படுத்து" என்றதுக்குஸம்வாதமருளுகிறார் (இலங்கையித்யாதி). ஜந்மமொன்றாயிருக்க நல்லவரக்கருண்டென்கைக்கு நியாமகமென்னென்ன வருளுகிறார் (ஜந்மமதுவானாலுமித்யாதி வாக்யத்வயத்தாலே). அரக்கருடைய வ்யாபாரமில்லாமையால் குலத்துக்குள்ளே கூட்டல்லாமையைக் கீழருளிச்செய்து, ஜந்மத்தாலும் இவர் கூட்டல்லாமையை ப்ரமாணமுகேந உபபாதிக்கிறார் (ஆக்க்யாஹீத்யாதி). ப்ரக்ருதோப ஸம்ஹாரம் (ஆகையாலித்யாதிவாக்யத்வயமும்).

"இப்போ குலவிளககாய்" என்கைக்கு முன்பு விளங்காமலிருந்ததோ வென்னும் ஶங்கையிலே "அரக்கரைக்குலம் பாழ்படுத்து" என்றதைக் கடாக்ஷித்தருளுகிறார் (ராவணனித்யாதி). (ஒளிமழுங்கிக் கிடந்த) என்றதுக்கு

---

(க) திருப்பாவை-கங. (உ) தி-வாய்-உ-எ-கo. (ங) ரா-ஆ-கஎ-உச.
(ச) ரா-யு-கக-எ. † பா,மிடம்.

றத்திட்ட விளக்காய்த்து. (கோன்மலை) ஸர்வஸ்வாமி நித்யவாஸம் பண்ணுகிறதேசம். ஸர்வஸ்வாமித்வம் வீறுபெற்றது இங்கேயிறே.

(சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும்) முன்புராவணாதிகளுக்கஞ்சிச் சிலம்பொழிந்தும் பஞ்சடையிட்டும் வருகை தவிர்ந்து, குலம்பாழ்படுக்கையாலே ஸ்வர்கத்தில் அப்ஸரஸ்ஸுக்கள் சிலம்பார்க்க வருவர்கள், (ஆடும்) ஸ்வர்க்கத்திலிருப்புக்கு ஸாதந

---

வவதரித்து, ராவணாதிகளைக்கிழங்கெடுத்துப்போகட்டபின்பாய்த்து ப்ரகாஶமாய்த்து; ஆகையாலே, குலத்துக்கு ப்ரகாசகனாய் நின்றவென்கிறது. (க) "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி" என்றாரிறே - ஸ்ரீகுலசேகரப்பெருமாள். இவர்கள் தாம் * பேசிற்றேபேசும் ஏககண்டரிறே. (கோன்மலை) ஸர்வஸ்வாமியானவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம். "குலவிளக்காய் நின்றகோன்மலை" என்கையாலே – இன்னம் அங்ஙனொத்த விரோதிகளை நிரஸித்து ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணுகைக்காக எழுந்தருளி நிற்கிற ஸ்த்தல மென்கிறது. ஆகையால்,ஸர்வஸ்வாமித்வம் வீறு பெற்றது – இங்கேயிறே.

(சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும்) முன்பு - தேவஸ்த்ரீகள் திருச்சிலம்பாற்றில் ஸ்நாநம்பண்ணவரும்போது ராவணாதிகளுக்கு அஞ்சி, சிலம்பொழிந்தும் †பஞ்சடையிட்டும் வருவர்களாய்த்து; இப்போது - அங்ஙனன்றிக்கே, அரக்கரைக் குலம் பாழ்படுக்கையாலே, சிலம்புகள் த்வநிக்கும்படி வந்து, தேவஸ்த்ரீகளானவர்கள் ஸ்நாநம்பண்ணுநிற்கிற. இவர்கள் ஏதுக்காக இப்படி ஸ்நாநம்பண்ணுகிறதென்னில்; ஸ்வர்க்கத்திலிருப்புக்கு ஸாத

---

ராவணனாலே இக்ஷ்வாகு வம்ஶ்யனான அநரண்யன் ஜயிக்கப்படுகையாலே அப்ரகாசிதமாய்த்தென்று கருத்து. (ஸ்த்தலமென்கிறது)என்றது- திருமாலிருஞ் சோலையானது இப்படிப்பட்ட ஸ்த்தலமென்னப்படுகிறதென்றபடி. (வீறு பெற்றது) அதிஶயம் பெற்றது.

இம்மலையிலே குலவிளக்காய் நின்றபின்போ சிலம்பார்க்க வந்ததென்னவருளுகிறார் (முன்பித்யாதி வாக்யத்வயத்தாலே). (பஞ்சையிட்டும்) என்றது- சிலம்புத்வநியாதபடி பஞ்சை அதிலேயடைத்துக்கொண்டு மென்றபடி. சங்காபரிஹாரமுகேந சீரித்யாதிக்கு அவதாரிகையிடுகிறார் (இவர்களித்யாதி ).

---

(க) பெரு-தி-௧௦-௬. † பா (பஞ்சையிட்டும்).

மூ.—வல்லாளன்தோளும் வாளரக்கன் முடியுந்தங்கை
பொல்லாத மூக்கும் போக்குவித்தான் பொருந்தும் மலை
எல்லாவிடத்திலு மெங்கும் பரந்து பல்லாண்டொலி
செல்லாநிற்குஞ் சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே. (உ)

மாக. சாலில் நீர்மாண்டாப்போலே, புண்யம் மாண்டால் தேடிக் கொள்ளும் தேசம். (சீர்) இதுதானேயிறே இதுக்கேற்றம். நிரூபகமும் இதுதானேயிறே இதுக்கு. (தென்திருமாலிருஞ்சோலையே) "தென்"என்று-அழகு. "மால்" என்று - பெருமை. இருமை-என்றும் பெருமை; மிக்கபெருமை யென்றபடி. .... .... (க)

அவ;—இரண்டாம்பாட்டு. (வல்லாளனித்யாதி) ப்ரதிஜ்ஞையிலே(க) "பல்லாண்டுபல்லாண்டு" என்றும், (உ) "பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப" என்றும் (௩) "பல்லாண்டுகூறுவத்தேன்" என்றும், "பல்லாண்டொலி செல்லா நிற்கும்" என்றுமருளிச்செய்கையாலே இவர் திருவுள்ளத்துக்குப் பொருந்துவது மங்களாசாஸநமே யென்று தோன்றுகிறதிப்பாட்டால்.

நமாக. சாலில் நீர்மாண்டாப்போலே, முன்பு ஆர்ஜித்த புண்யம் மாண்டால், தேடிக்கொள்ளும்தேசம் இது வாய்த்து. (சீரித்யாதி) இப்படியிருந்துள்ள கௌரவத்தையுடைய திருச்சிலம்பாறானது அவிச்சிந்ந ஸ்ரோதோரூபேண ப்ரவஹியாநிற்கும். (௩) "க்வசித்வரிதகாமி நீ க்வசநமந்தமந்தாலஸா" என்று தொடங்கி ஒருஸ்லோகத்தாலே திருச்சிலம்பாற்றினுடைய கதியைவர்ணித்து அருளிச்செய்தாரிறே — ஆழ்வான். (தென்திருமாலிருஞ்சோலையே) "தென்"என்று-அழகாதல்; தெற்குத்திக்கிலேயான வென்னுதல். "மால்" என்றும், "இருமை" என்று மிரண்டும் - பெருமைக்கு வாசகமாய், சோலையினுடையழகத்தையும் பரப்பையும் சொல்லுகிறது. இப்படி யிருக்கிறசோலைகளை யுடைத்தாகையாலே மாலிருஞ்சோலையென்று அத்தேசத்துக்கு நிரூபகம். * வநகிரியிறே. .... ... ... (க)

(இது வாய்த்து) என்றவநந்தரம் "என்கிறார்" என்று சேஷம், பாயுமென்கிற வர்தமாநார்த்தம் (அவிச்சிந்நேத்யாதி), அவிச்சிந்நமாக ப்ரவஹிக்கைக்கு ஸம்வாதம் (க்வசிதித்யாதி). ... ... ... ... ... (க)

(க) திருப்பல்லா. (உ) க-௧௦-டு. (௩) ௩-௩-கூ.

ஸ்வா.—(வல்லாளனித்யாதி). ப்ரஹ்மா கொடுத்த வரத்தால்வந்த மிக்காண்மையையும், ருத்ரன்கொடுத்தவாளையுமுடைய வரக்கன் தோளும்முடியும். அவன் தன்னைப்போலே யதேஷ்ட

வ்யா;—இரண்டாம்பாட்டு. (வல்லாளன்) வலிய ஆண்மையை யுடையவன். ஆண்பிள்ளைத்தனத்தில் வந்தால் ப்ரபலனானவனென்கை. திக்கஜங்களோடே பொருதும் திக்பாலகர்களை ஜயித்துமிருக்குமவனிறே. (க) "ஹிமவாந்மந்தரோ மேருஸ்த்ரைலோக்யம்வா ஸஹாமரை:। ஶக்யம்புஜாப்யாமுத்தர்த்தும்" என்றவனிறே. (வாளரக்கன்) அதுக்குமேலே, ருத்ரன்பக்கலிலேபெற்ற வாளையுமுடையவன். இத்தால்இந்தத்தோள்வலியும் வாள்வலியு முடையனாகையாலே ஒருவராலும் ஜயிக்கவொண்ணாதவனென்கை. இப்படியிருக்கிறவனுடைய (தோளும் முடியும்) இத்தால் - அவனையழியச்செய்கிறவிடத்தில் ஓரம்பாலே அழியச் செய்துவிடலாயிருக்க, தோளைக்கழித்துத் தலையையறுத்துப் போதுபோக்காகநின்று கொன்றபடி சொல்லுகிறது. (தங்கை

அரு;—இரண்டாம்பாட்டு. (வல்லாளனித்யாதி) ஆண்மை - பும்ஸ்த்வமென்கிற தர்மமாயிருக்க, அதுக்கு வலிமை சொல்லும்படி யெங்ஙனே யென்ன வருளுகிறார் (ஆண்பிள்ளைத்தனத்திலித்யாதி). (ஆண்பிள்ளைத்தனத்தில்) என்றது-பும்ஸ்த்வகார்யமான ஶௌர்யாதிகளிலே யென்றபடி. இவனுடைய ஶௌர்யாதிகளில் ப்ராபல்யத்தை அவனுடைய க்ருத்யத்தாலும் உக்தியாலும் மூதலித்துக்காட்டுகிறார் (திக்கஜேத்யாதி வாக்யத்வயத்தாலே), "வல்லாளன்" என்றபோதே வாளுண்டாயிருக்க, வாளரக்கனென்றதுக்குக் கருத்தென்னென்ன வருளுகிறார் (அதுக்கித்யாதி). "வல்லாளன் வாளரக்கன் தோளும் முடியும்" என்றந்வயித்துத் தாத்பர்யமருளுகிறார் (இத்தாலிந்தவித்யாதி வாக்யத்வயத்தாலே), வாளரக்கன்முடியையென்னவமைந்திருக்க, தோளையும் சொன்னதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (இத்தாலித்யாதி), (போதுபோக்காக) என்றதுக்கு - இப்படி விளம்பித்தால் அநுகூலித்தானாகில் ப்ராணனோடே விடலாமே யென்று பெருமாளுடைய திருவுள்ளமென்று கருத்து. அரக்கியின் மூக்கென்னாதே, தங்கையென்று அவன்ஸம்பந்தம் தோன்றவரு

(க) ரா-யு-ருக-கக௨.

சாரித்வத்தால்வந் தபொல்லாங்கையுடைய தங்கையுடையமூக்கும். (போக்குவித்தான்) இவளை அங்கஹீநையாக்கி இவர்களால் லோக த்துக்குவந்த விரோதத்தை நீக்கினவன் நித்யவாஸம் செய்கிற திருமலை.

(எல்லாவித்யாதி). விஷயாநுரூபம் ஸ்வரூபமென் பாரிடங் களிலும், ஸ்வரூபாநுரூபமே புருஷார்த்தமென்பாரிடங்களிலும், உ பாஸநாத்மகஜ்ஞாநமுடையாரிடங்களிலும் ரக்ஷ்யரக்ஷகபாவம் மாரு டி பல்லாண்டொலி செல்லாநிற்கும். பல்லாண்டென்கிற மங்களா சாஸந ப்ரகாசிதர்க்குப் பரதந்த்ரரானதும், நித்ய விபூதியிலும்

---

பொல்லாத மூக்கும்) (க)"மன்னனிராவணன்றன் நற்றங்கை" என் கிற பலங்கொண்டு ஸ்வைரம் ஸஞ்சரித்துத்திரிந்த * கொல்லையரக் கியான சூர்ப்பணகையினுடைய ஹேயமான மூக்கையும். (போக் குவித்தான்) அறுப்புண்டுபோம்படி பண்ணினவன். இவள் மூக்கை யரிந்தவோபாதிகாணும் அவனுடைய தோளும்முடியுமறுத்தஅநா யாஸமும். (பொருந்தும்மலை) இப்படி அவனுக்கு ப்ராணஹாநியை யும் இவளுக்கு அங்கஹாநியையும் பண்ணினவன், அவதாரம்போ லே தீர்த்தம் ப்ரஸாதியாதே, நித்யவாஸம்பண்ணுகிறமலை.

(எல்லாவித்யாதி) அநந்யப்ரயோஜநரோடு, ப்ரயோஜநாந்தர பரரோடு, அநந்யஸாதநரோடு, ஸாதநாந்தரபரரோடு வாசியற, எல் லாருடைய விடங்களிலும் திருமலையிலுள்ள பரப்பெங்கும் வ்யாப் தமாய்க்கொண்டு மங்களாசாஸநத்வநி நடந்துசெல்லாநிற்கும். ப்ர யோஜநாந்தரபரர்க்கும் இது கூடுமோவென்னில்; அவர்களையுமிங் கேவந்து புகுரக்கொள்ள, இந்த நிலமிதிதானே தங்கள் ப்ரயோஜ நத்தைமறந்து மங்களாசாஸநத்திலே மூளும்படி பண்ணுமாய்த்து.

---

ளிச்செய்ததுக்கு ப்ரமாண பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (மன்னனித்யாதி), (கொல்லை)என்றது-வரம்பில்லாதவளென்கை. வாளரக்கன் முடியைப் போக் கினவரென்று பராக்ரமம் சொல்லுமிடத்தில் ஸ்த்ரீவ்யக்தியுடைய மூக்கைப் போக்குகையைச் சொல்லுகை சேரும்படி யென்னென்ன, (இவளித்யாதி).

எங்குமென்றத்தோடுபௌநருக்த்யம் வாராமைக்காக "எல்லாரிடத்தி லும்" என்றதுக்கு எல்லாரிடத்திலு மென்றார்த்தம் வி[illegible]த்து அத்தை விசேஷித்துக் காட்டுகிறார் (அநந்யேத்யாதி), ப்ரயோஜநாந்தரபரரை நிலமிதி தானே மங்களாசாஸநத்திலே மூட்டுமென்கைக்கு கைமுதிகந்யாயத்தை

---

(க) பெரியதிருமடல்-கசச.

மிகவேண்டுவது இங்கேயாகையாலே செல்லாநிற்கும். (சீர்) அம் மலைமேல் வர்திக்கிறவர்களும், அம்மலைமேலுண்டான பதார்த்தங் களைப்பக்வமாக்கி, அங்கேயிருந்திறே திருமலையாழ்வாரை(க)"உன் பொன்னடிவாழ்க" என்று அமுதசெய்யப்பண்ணுவதும். ஆஶ்ரிதர் ஸந்நிதி பண்ணவேணுமென்ற விடத்திலே ஸந்நிதிபண்ணுமவரிறே திருமலையாழ்வாரும். அன்றிக்கே "உன்பொன்னடிவாழ்க" என் கிறது அழகராகவுமாம். இருவர்க்குமுண்டிறே மங்களாசாஸநபர ரான வாஶ்ரிதர்க்குப் பரதந்த்ரராகை. இரண்டிடத்திலுமுண்டிறே *பின்னுமாளும் செய்கை. ஏவம் ப்ரகாரமான குணங்களை யும், "திருமாலிருஞ்சோலைமலை" என்கிறதிருநாமத்தையுமுடையரா யிறே திருமலையாழ்வார் தாமிருப்பது. இனக்குறவர் "பொன்னடி வாழ்க" என்கிறது, "எந்தாய்" என்கிறதிலே ப்ராதாந்யம். இங் குத் திருமாலிருஞ்சோலையென்கையாலே திருமலையாழ்வார்மேலே ப்ராதாந்யம். அதுக்கடி-அழகர்க்கு(உ)"சென்றால்குடையாம்" என் கிறபடியே இஷ்டவிநியோகார்ஹமாயிருக்கையிறே. "தென்" என்று திக்காதல், அழகாதல், தென்னவென்கிற ஆளப்பமாதல். மாலும் இருமையும்-பெருமையாய், மிக்க பெருமையென்னுதல், மாலினு டைய பெரியசோலை யென்னுதல், *மயல்மிகு பொழிலாய், மாலு க்கு மாலைவிளைக்கு மென்னுதல். ... ... ... (உ)

* புனத்தினைக்கிள்ளிப் புதுவவிக்காட்டுகிற குறவரும் "உன் பொன்னடிவாழ்க" என்று மங்களாசாஸநம் பண்ணும்படியிறே நிலத்தின் மிதிதானிருப்பது. (சீர்த்தென் திருமாலிருஞ்சோலையே) இப்படி யிருந்துள்ள கௌரவத்தையுடைத்தாய், அழகியதா யிருந் துள்ள திருமாலிருஞ்சோலை யென்கை.

உட்கொண்டு ப்ரமாணம் காட்டுகிறார் (புனத்தினையித்யாதி). புனத்தில் தினையைமுறித்து ஹவிஸ்ஸாகாட்டி, புதியதமுது செய்யப் பண்ணியென்று பாசுரார்த்தம். (தினை) தாந்ய விசேஷம். இத்தால் ப்ரயோஜநாந்தரத்துக்கும் கூட எம்பெருமானைப் பற்றவறியாத குறவருங்கூட அந்நில ஸ்வபாவத்தாலே மங்களாசாஸநம் பண்ணும்படியானால், பகவத்விஷயத்தில் ப்ரயோஜநாந்தரங் களைக் கொள்ளுமவர்களுக்குச் சொல்லவேண்டாவிறே யென்று தாத்பர்யம் சொல்லிற்றாயிற்று. தென்னென்றதினர்த்தம் (அழகியதாய்) என்றது. (உ)

(க) ஙு-ரு-ரு. (உ) க-திருவ-ஙு-ரு.

மூ.—தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யுஞ் சலவரைத்
தெக்காநெறியே போக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை
எக்காலமுஞ் சென்று சேவித்திருக்குமடியரை
அக்காநெறியைமாற்றுந் தண்மாலிருஞ்சோலையே. (௩)

ஸ்வா;—மூன்றாம்பாட்டு. (தக்காரித்யாதி) ஈஸ்வரனோடொக்கக்ருபையொத்திருக்குமவர்கள். (தக்கார்) ஈஸ்வரனுக்குத் தகுதியானவர்கள். அதாவது-நினைவொன்றாயிருக்கை. ஸர்வாத்மாக்களும் உஜ்ஜீவிக்கவேணுமென்கிற க்ருபையொத்திருக்கை. (மிக்கார்களை) ஈஸ்வரனிலும்பிராட்டியிலும் க்ருபைமிக்கிருக்கை. அதாவது-புருஷகாரமாவார்-கைவிட்டவர்களைக் கொள்ளுமவர்களிறே. (க)"அன்னையாயத்தனாயென்னையாண்டிடுந் தன்மையான் சடகோபனென் நம்பியே" என்று ஈஸ்வரனும் பிராட்டியும் செய்யுங் காரிய

வ்யா;—மூன்றாம்பாட்டு. (தக்கார்) ஈஸ்வரனோடொக்க க்ருபையொத்திருக்குமவர்கள். (தக்கார்) ஈஸ்வரனுக்குத் தகுதியானவர்கள். அதாவது-நினைவு ஒன்றாயிருக்கை. "ஸர்வாத்மாக்களுமுஜ்ஜீவிக்கவேணும்" என்கிற க்ருபை ஒத்திருக்கை. (மிக்கார்களை) அவனைப்போலே ஸ்வதந்த்ரராய், அபராதங்களைக் கண்டவாறே (௨)"க்ஷிபாமி-க்ஷிபாமி"(௩)"நக்ஷமாமி-நக்ஷமாமி,"என்கையன்றிக்கே, எப்போதுமொக்கஅநுக்ரஹ சீலராயிருக்கையாலே அவனிலுங் காட்டில் அதிகராயிருக்குமவர்களை. ஆகையிறே-இவர்களைப் பற்றுமிடத்தில் புருஷகார நிரபேக்ஷமாகப் பற்றலாயிருக்கிறது.

அரு;—மூன்றாம்பாட்டு. (தக்காரித்யாதி) "தக்கார் மிக்கார்கள்" என்றதுக்கு துல்யரென்றும் அதிகரென்றும் தோன்றுகையாலே, அது சேராமையாலே ஓராகாரத்தாலேதுல்யரென்றும், ஓராகாரத்தாலே அதிகரென்றும்விவக்ஷித்து தௌல்யத்தைக் காட்டுகிறார் (ஈஸ்வரனோடித்யாதி). (ஈஸ்வரனோடொக்க) என்றது - ஈஸ்வரனோடொக்கும்படியாகவென்கை. புநः ப்ரதீகம் க்ரஹித்துஶப்தார்த்தமருளுகிறார்(தக்காரித்யாதி). தகுதியானவரென்று ஶப்தார்த்தமாகில் க்ருபை யொத்திருக்குமவர்களென்று சொன்னபடியெங்ஙனேயென்னவிவரிக்கிறார் (அதாவதித்யாதிவாக்யத்வயத்தாலே).உக்தார்த்தத்தை உபபத்தியாலே த்ருடீகரிக்கிறார் (ஆகையிறேயித்யாதி). எப்போது மொக்கவநுக்ரஹஶீலரென்கைக்கு ப்ரமாணங்களைக்காட்டுகிறார் (சலிப்பின்றியித்யாதி).

(க) கண்ணி-௪. (௨) கீ. (௩) வராஹபு.

மும்செய்து, தாம்செய்யும் காரியமும் செய்கையாலே மிக்காரென்கிறது. (க) "வருமையுமிம்மையுமநன்மையளிக்கும் பிராக்களே" என்று இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரிவர்களிறே. ஈஶ்வரனருளிலும் இவர்களருளிறே நன்றாயிருப்பது. (உ) "நல்லருளாயிரவர்நலனேந்தும் திருவல்லவாழ்" என்னக்கடவதிறே.

(சஞ்சலம் செய்யும் சலவரை) பகவத் விஷயத்திலே வைத்த நெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ருத்ரிமரை. ஶ்ரீதண்டகாரண்ய வாஸிகளான ருஷிகள் பகவத்யாகம் குலைந்து (௩) "ஏஹிபஶ்ய ஶரீராணி-ஏஹிபஶ்யஶரீராணி" என்று உடம்புக்கு மன்றுடும்படியாய்த்திறே.(சலவர்) அநுகூலரைப்போலே வந்து ப்ராதிகூல்யம்

---

(ச) "சலிப்பின்றி யாண்டெம்மைச் சன்மசன்மாந்தரம் காப்பர்" என்கிறபடியே-ஆஶ்ரயித்தவர்களைச்சலமறநோக்குவாரும்(க)"வருமையுமிம்மையும் நன்மையளிக்கும் பிராக்கள்" என்கிறபடியே இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரும் இவர்களேயிறே, ஆகையால், ஈஶ்வரனருளிலும் இவர்களருளிறே நன்றாயிருப்பது. (உ) "நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ்" என்னக்கடவதிறே.

(சஞ்சலஞ்செய்யும் சலவரை) பகவத்விஷயத்திலே வைத்த நெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ருத்ரிமரை. ஶ்ரீதண்டகாரண்யவாஸிகளான ருஷிகள் பகவத்யாகம் குலைந்து (௩) "ஏஹிபஶ்யஶரீராணி-ஏஹிபஶ்யசரீராணி" என்று உடம்புக்குமன்றுடும்படியாய்த்திறே-ராக்ஷஸர்கள் கலக்கினபடி. (சலவர்) அநுகூலரைப் போலேயிருந்து ப்ராதிகூல்யம் பண்ணுமவர்கள். (தெக்காநெறியே) நரகத்

---

ப்ரக்ருதோபஸம்ஹாரம் (ஆகையாலித்யாதி). இவர்களருள் நல்லதென்கைக்கு ஸம்வாதமருளுகிறார் (நல்லருளித்யாதி).

தேக்கா நெறியே போக்குவிக்கைக்கு ஹேதுவாக வேண்டி, சித்த சாஞ்சால்ய பரமாக்கி ஸப்தார்த்த மருளுகிறார் (பகவத் விஷயத்திலித்யாதி). இப்படிகலங்கப்பண்ணின விடமுண்டோ வென்னவருளுகிறார் (ஶ்ரீதண்டகேத்யாதி) (சலவர்). ச(ஷ)லவான்கள்; அத்தால் கபடிகளென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (அநுகூலரையித்யாதி), தெக்காவென்று-தெற்குத்திக்குக்குப் பாலகனான யமனைச் சொல்லுகிறதாய், தத்ஸம்பந்தியான நெறி-மார்கமென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம் பற்றித்தாத்பர்யமருளுகிறார் (நரகத்துக்

---

(க)தி-வாய்-௩-எ-௰. (உ) தி-வாய்-௰-௧-௫௦. (௩)ரா-ஆ. (ச) தி-வாய்-௩-எ-௧.

பண்ணுமவர்கள். (தெக்காநெறியே) நரகத்துக்குப்போம் வழியே. (போக்குவிக்கும்) மீட்சியில்லை. (செல்வன்பொன்மலை) இப்படி போம்படி பண்ணுகைக்குஹேது ஸ்ரியஃபதியாகையாலே. (க) "அசுரர்க்குத் தீங்கிழைக்கும் திருமால்" என்னக்கடவதிறே. ராவணாதிகளைக் கொல்லுகைக்குத் தபஸ்ஸு பண்ணுமவனிறே. (பொன்மலை) ஸ்ரியஃபதிவர்த்திக்கிற ஸ்லாக்யமான திருமலை.

(எக்காலமும் சென்று சேவித்திருக்குமடியரை) அநந்ய ப்ரயோஜநராய்ப் புறம்பு அந்யபரதையில்லாமையாலே சேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே காலநியதி உள்ளது. இவர்க

---

துக்குப்போம் வழியே. யமபுரம் தக்ஷிண திக்கிலே யாகையாலும், நரகத்துக்குப் போவார் போவது அவ்வழியே யாகையாலும், "தெக்காநெறி" என்று - யாம்யமார்க்கத்தைச் சொல்லுகிறது. (போக்குவிக்கும்) மீட்சியில்லை. (செல்வன்). இப்படி போம்படிபண்ணுகைக்கு ஹேது ஸ்ரியஃபதியாகையிறே. (க) "அசுரர்க்குத் தீங்கிழைக்கும் திருமால்" என்னக்கடவதிறே. ராவணாதிகளைக் கொல்லுகைக்கு தபஸ்ஸு பண்ணுமவனிறே. (பொன்மலை) இப்படியிருக்கிறவன் வர்த்திக்கிற ஸ்லாக்யமான திருமலை.

(எக்காலமுமித்யாதி) அநந்யப்ரயோஜநராய், புறம்பு அந்யபரதையில்லாமையாலே ஸர்வகாலமும் சென்று ஸேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே காலநியதியுள்ளது; இவர்களு

---

இத்யாதி வாக்யத்வயத்தாலே; "நெறியேபோக்குவிக்கும்" என்றதுக்கு நரகத்தைப்ராபிப்பிக்குமென்றாய், அதில்வர்த மாநார்த்தமருளுகிறார் (மீட்சியில்லை) என்று. (அசுரர்க்குத் தீங்கிழைக்கும்) என்றதுக்கு ( ராவணேத்யாதி ). (உ) "[illegible] - ஸ்வர்கம்துர்கதிமாபவர்கிகபதம்ஸர்வஞ்சகுர்வந் ஹரிஃ" என்றதநுஸந்தேயம்.

(புறம்பு அந்யபரதையில்லாமையாலே) என்றதுக்கு பாஹ்யபதார்த்தங்களிலே ப்ரக்ருதிவாஸனையாலே உண்டான வாஸக்தியில்லாமையாலேயென்று கருத்து. "[illegible] - நப்ரதோக்ஷேஹரம் பஸ்யேத்" என்றிருக்க, ஸர்வகாலமென்னக்கூடுமோவென்னவருளுகிறார் (ப்ரயோஜநாந்தரேத்யாதி). "அடியரை" என்றது ஹேத்வபிப்ராயமென்கிறார்

---

(க) தி-வாய்-௩-ரு-உ. (உ) ஸ்ரீஸ்த.

ளுக்கு காலநியதியில்லை. அதுக்கடி அடியாராகையாலே. (௧)"எழுவார் விடைகொள்வாரீன் துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்" என்னக்கடவதிறே. (அக்கான்னெறியைமாற்றும்) அக்காட்டு வழியை மாற்றும். *பாவக்காடிறே. (தண்மாலிருஞ்சோலையே) அழகர் ப்ரதிகூலரைத் தெக்கானெறியே போக்குவிப்பர். திருமலையாழ்வார் அநுகூலரைஅக்கானெறியைமாற்றுவிப்பர். (௨) "பிணிவீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன்" (௩)"சமன் கொள்வீடுதரும் தடங்குன்றம்" என்னக்கடவதிறே. அழகரைப் பற்றுகையிலும் * அபன்மலையடைவததுவிறே கருமம்.

---

க்கு அது இல்லை; அதுக்கடி - * அடியாராகையிறே. (௧) "எழுவார் விடைகொள்வாரீன்றுழாயானை, வழுவாவகை நினைந்துவைகல் தொழுவார்" என்னக்கடவதிறே. (அக்கான் நெறியை மாற்றும்) அக்காட்டு வழியை மாற்றும். * பாவக்காடிறே. (தண்மாலிருஞ்சோலையே) தட்பமாவது-ஸம்ஸாரதாபத்தை ஆற்றுமதாயிருக்கை. அழகர், ப்ரதிகூலரை *தெக்காநெறியே போக்குவிப்பர்; திருமலையாழ்வார், அநுகூலரை*அக்கானெறியை மாற்றுவிப்பர். (௨) "பிணிவீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன்" (௩)"சமன் கொள்வீடுதரும் தடங்குன்றம்" என்னக்கடவதிறே. அழகரைப் பற்றுகையிலும் * அபன்மலையடைவததுவிறே கருமம். .... (௩)

---

(அதுக்கித்யாதி). இத்தால் "𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑍈𑌵𑌚𑌕𑍍𑌰𑌮𑌃 – அத்யந்தபக்தி யுக்தாநாம் நஶாஸ்த்ரம் நைவசக்ரம:" என்கிறபடியே ப்ரீத்யதிஶயத்தாலே கைங்கர்யம் பண்ணுமவர்களுக்கு ஒரு கால நியதியில்லையென்றதாயிற்று. உக்தார்த்தேப்ரமாணம் (எழுவாரித்யாதி). (வழுவாவகை) நழுவாவகை. தச்சப்தம்ப்ரஸித்தித்யோதகமாகையாலேப்ரமாணப்ரஸித்தியைக்காட்டுகிறார் (பாவக்காடிறே) என்று. ப்ரதிகூலரைத்தெக்கான் நெறியேபோக்குவிக்கையாவது- ஆஶ்ரிதவிரோதிநிரஸநம் பண்ணுகையென்று திருவுள்ளம்பற்றி, பிணியும் ஆஶ்ரித விரோதியாகையாலே அதுக்கு ப்ரமாணமருளுகிறார் (பிணிவீயுமாதித்யாதி). அநுகூலரை அக்கானெறியை மாற்றுகையாவது-பரபங்களைப்போக்கிப் பரமபதத்தைக் கொடுக்கையென்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாணம் (சமன்கொளித்யாதி). இப்பாட்டிலர்த்தத்தையெல்லாம் திருவுள்ளம்பற்றிஈடுபடுகிறார் (அழகரையித்யாதி). ... ... (௩)

---

(௧) ௧-திருவ-௨௧. (௨) தி-வாய்-௩-௩-௫. (௩) தி-வாய்-௩-௩-௭.

மூ;—ஆனயர்கூடி யமைத்தவிழவை யமரர்தம்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான்மலை
வானாட்டினின்று மாமலர்க்கற்பகத்தொத்திழி
தேனறுபாயுந் தென்றிருமாலிருஞ்சோலையே. .... (௪)

---

ஸ்வா;—நாலாம்பாட்டு. (ஆனயரித்யாதி) பசுமேய்க்குமிடையர் திரண்டு.(க)"ஆனானயன்" என்னக்கடவதிறே இவன் தன்

---

வ்யா;—நாலாம்பாட்டு. (ஆனயரித்யாதி) கோ(மோ)தநரான இடையர், வர்ஷார்த்தமாக வத்ஸரந்தோறும் ஒருதிவஸம் இந்த்ரனை ஆராதித்துப்போரக் கடவர்களாய், அதுக்குடலாக அவர்கள், வாசல்கள்தோறும் ஆக்கியெடுத்துச் செல்லுகிறபடியைக்கண்டு, "நீங்கள்செய்கிறதென்?" என்று கேட்க; "வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச் சோறிடுகையாயிருக்கும்" என்ன; "நாம் பிறந்து வளருகிற வூரிலே ஒரு த்ரவ்யத்தை தேவதாந்தரம் கொள்ளுகை யாவதென்?" என்று நினைத்து அத்தைவிலக்குகைக்காக, "இந்த்ரனாகிறவனெவன், அவனை நீங்கள் கண்டறிவதுண்டோ, அவன்றான் நீங்களிட்ட சோற்றை உண்ணக்கண்டறிவீகோளோ, ஒன்று மறியிலீகோளாயிருந்திகோள்; ஆஃபின்பு, மேகங்களும் வந்து படிந்து வர்ஷிக்கும்ஸ்த்தாநமாய், என்றுமொக்கப் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுண்டாய், நமக்கு மழைக்கும் காற்றுக்கு மொதுங்கிடமாய், கோக்களைவர்த்த(யி)ப்பிக்கைகையாலே"கோவர்த்தநம்"என்னும் பேரையுடைத்தாயிருக்கிற இம்மலையன்றோ நமக்குத்தெய்வம், இதின் முன்னே நீங்கள் சமைத்தவையெல்லாம் கொண்டுவந்திடுங்கோள்" என்ன; பஞ்சலக்ஷம் குடியிலுள்ள இடையரெல்லாரும்

---

அரு;—நாலாம்பாட்டு. (ஆனயரித்யாதி) இடையரெல்லாரும் இந்த்ராராதநரூபமானவிழவைக்கூட்டிக்கொள்ளுகைக்கு நிமித்தத்தையும், க்ருஷ்ணன் அவனுக்குத் தவிர்த்து மலைக்கிடுவித்தப்ரகாரத்தையும் பரக்க உபபாதியாநின்று கொண்டு தாத்பர்யமருளுகிறார் (கோதநரித்யாதி). ஆயரென்னவமைந்திருக்க, ஆனென்று விசேஷித்ததுக்குக் கருத்து (கோதநரான) என்றது. (கொண்டு வந்திடுங்கோள் என்ன)என்கிறவிதுக்கு கோவர்த்தநத்துக்காம்படி செய்தவென்றத்தோடன்வயம், கூடியென்றதினர்த்தம் (பஞ்சலக்ஷத்யாதி).

---

(க) தி-வாய்-க-அ-அ.

ளையும். (அமைத்தவிழவை) இடையர்கூடிச் செய்த உத்ஸவத்தை. இதில் உடன்படாதான் க்ருஷ்ணனொருவனுமிறே. அதுக்கடி, தான் பிறந்து இவர்கள் கொடாதபோது, உங்களளவிலே யதிகரித்து அஸாதாரண விக்ரஹத்திலே கைக்கொள்ளும் பதார்த்தங்களை தேவதாந்தர்யாமித்வாரா கைக்கொள்ளுகை திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாகையாலே. (அமரர்தங்கோனார்க்கொழிய) அமரரென்று தேவஜாதி. கோனாரென்று இவர்களுக்கும்பிடு கொள்ளுகிறவர். (ஒழிய) க்ருஷ்ணன் நந்தகோபரையழைத்து "பசுக்களுக்கு இந்த மலையிலேயன்றோ புல்லும் தண்ணீரும்; இது கோவர்த்தநமென்று பேராகைக்கடி, கோவை வர்த்திப்பிக்கு மென்றன்றோ? ஆனபின்பு அவனுக்கிடத் தவிர்ந்து இந்தமலைக்கிடப்பாருங்கோள்" என்றருளிச் செய்ய, அவருமத்தைக்கேட்டு இடையரையழைத்து "இந்தச் சிறுப்பிள்ளைக்குள்ள அறிவும் நமக்கின்றிக்கேயிருந்தது, இவன் சொன்னப்போலே செய்யுங்கோள்" என்ன; அப்படியே செய்கிறோமென்று மலையின்முன்னே கொண்டுபோய்க் குவித்தார்கள். (கோவர்த்தநத்துச் செய்தான் மலை) * அங்கொரு பூத வடிவு கொண்டு அமுதுசெய்து இடையரோடுங்கூட நின்று வேண்டும் வரங்களும் வேண்டிக்கொண்டவன் வர்திக்கிற தேசம்.

---

திரண்டு இந்த்ரார்த்தமாகக் கல்பித்த உத்ஸவத்தை, முப்பத்துமுக் கோடி தேவர்களையும் கும்பிடு கொள்ளு மேற்றத்தையுடையராய், தம்மைப்போரப்பொலிய நினைத்திருக்குமவர்க்கொழிய, அசேதநமாயிருப்பதொரு பர்வதமான கோவர்த்தநத்துக்காம்படி செய்தவனுடையமலை. அப்படி தன்னபிமாநத்திலே ஒதுங்கினவர்களை அந்யசேஷமாகாதபடி நோக்கி, திருமலையாழ்வார்க்கு சேஷமாக்குகைக்காக அவனெழுந்தருளியிருக்கிற தேசமென்கை.

---

அமைத்த விழவை யென்றதினர்த்தம் (இந்த்ரார்தமாகவித்யாதி). அமரர்தம் கோனென்றதினர்த்தம் (முப்பதித்யாதி). கோனாரென்றது - பூஜாயாம்பஹுவசநமாகையாலேஅத்யைருளுகிறார் (தம்மையித்யாதி). "கோவர்த்தனத்து" என்றவிடத்தில் சதுர்த்தி விபக்திலுப்தமாயிருக்கிறதென்று திருவுள்ளம்பற்றி அர்த்தமருளுகிறார் (அசேதநேத்யாதி). "ஆம்படி" என்றதத்யாஹார்யம். க்ருஷ்ணன் மலையென்னவமைந்திருக்கவும், இப்படிவிசேஷித்ததுக்கு ஹார்த பாவத்தையருளுகிறார் (அப்படியித்யாதி).

